# அடவி

உண்மைக் காடுகள் அல்ல செந்திருவின் மனத்தில் இருந்தவை. அகநானூற்றுக் காடுகள். இருபுறமும் பெரிய பாறாங்கற்களிலிருந்து தேன்கூடுகள் தொங்க, இடையே பால்போல் அருவி விழும் காடுகள். காட்டிற்குப் போக வேண்டும். வாகன ஒலிகள், பேச்சொலிகள், நடை ஒலிகள், வீடுகளில் இயங்கும் மின்கருவி ஒலிகள் இவற்றை எல்லாம் விட்டுத் தூரத்தே ஒரு காட்டுக்கு.

வானப்ரஸ்த முயற்சியா என்று சிலர் கேலி செய்தனர். 'காடு வா வா வீடு போ போ' என்று கெக்கலி வேறு. பிரம்மசர்யம், சம்சாரம், வானப்ரஸ்தம், சந்நியாசம் எல்லாம் வேறு வேறு கட்டங்களா என்ன? ஒன்றைக் கடந்துதான் இன்னொன்றில் நுழைய வேண்டுமா என்ன? எல்லாம் கலந்து இருக்கக் கூடாதா?

அவள் தந்தை காப்பி எஸ்டேட்டில் வேலைபார்த்தவர். பல காப்பி எஸ்டேட்டுகளின் உரிமையாளர் ஒருவரிடம் தலைமைக் கணக்கராக வேலைபார்த்தவர். பெங்களூரில் தாயுடன் தங்கிப் படித்துக்கொண்டிருந்த இவளும், இவள் தம்பியும் லீவு நாட்களில் அப்பாவிடம் போகும்போது அந்த மலைப் பகுதியின் காப்பித் தோட்டங்கள், மிளகு, ஏலத் தோட்டங்கள், மரங்கள் அடர்ந்த பகுதிகள் இவற்றில் புகுந்து ஓடியபடிதான் மத்தியானங்கள் கழியும்.

"பத்திரம். கரடி எல்லாம் வர்ற இடம்" என்று எச்சரித்தவண்ணம் இருப்பார்கள் எஸ்டேட் தொழிலாளர்கள்.

பிரசவ வலி எடுத்த பிறகு அம்மாவைச் சற்றுத் தூரத்திலிருக்கும் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச்செல்லும் போது, நடுவழியிலேயே வண்டியிலிருந்து இறங்க நேரிட்டதாம். அவசரமாக அவளை இறங்கவைத்து, கிளைகளைப் பரப்பி நின்ற ஒரு மரத்தினடியில் உட்காரவைத்த பத்து நிமிடங்களில் செந்திரு பிறந்துவிட்டாளாம்.

"நான் காட்டு வழியா போறப்போ ஒரு மரத்துக்கு அடியில நீ கிடந்தே. உன்னைத் தூக்கிட்டு வந்திட்டேன். உங்கம்மாவா உன்னைப்

பெத்தா?" என்று கேலிசெய்து, இவளை வம்புக்கு இழுத்து அழ வைப்பது அப்பாவுக்கு ஒரு விளையாட்டு.

"நிசமாவாம்மா?" என்று ஒவ்வொரு முறையும் கண்களில் நீருடன் அம்மாவிடம் போவாள்.

"ஆமாமாம். நீ கெடந்தே, இவரு தூக்கிட்டு வந்தாரு. பெரிய ஜனக மகாராஜா பாரு இவரு" என்பாள் அம்மா.

தம்பி பெரியவனான பிறகு அவன் கேலி செய்யத் தொடங்கினான்.

"ஏ, மரத்தடியில பொறந்த பொண்ணே" என்று.

அப்போது இவள் அழவில்லை.

"புத்தர்கூட மரத்தடியிலதான் பொறந்தார் தெரியுமா?" என்று பதிலடி கொடுப்பாள்.

"அப்ப நீயும் ஒரு போதி மரத்தைத் தேடிப் போயிடுவியா?" என்று பரிகாசம்செய்வான்.

மலைக் காட்டில் பிறந்து விளையாடிய பெண்தானே தான் என்று அவள் திருமலையிடம் கூறினாள். திருமலை உடன்படவில்லை. ஏதோ காட்டில் வாழும் வேடுவப் பெண்ணாய் அவள் தன்னைக் கற்பனை செய்துகொள்கிறாள் என்றான் அவன். கொஞ்சம் விட்டால் ஆலோலம் பாடிய வள்ளியாகத் தன்னைப் பாவித்துக்கொண்டு விடுவாள் என்று கேலிசெய்தான்.

அப்படி அவன் என்னதான் சொல்லிவிட்டான் கடுந்தவம் செய்யப் புறப்படுபவளைப்போல் அவள் காட்டிற்கு ஓட? பல கிளைகள் கொண்ட வியாபாரத்தில் தன் கூட்டாளியாக அவளைச் சேர்த்துக் கொள்ள அவன் தயார்தான். அதில் அவன் ராஜா என்றால் அவள் ராணி என்றுதான் நினைத்திருந்தான். அவன் வியாபார சகாக்கள் இதற்கு உடன்படவில்லை என்றால் இதில் அவன் தவறேதும் உண்டா? இதில் அவனுக்கு வருத்தமில்லையா? அதற்காக மூட்டை கட்டிக் கொண்டு கிளம்பிவிடுவதா? காட்டைப் பார்க்க ஓடிவிடுவதா? உண்மைதான். சாதாரண நிலையிலிருந்து இங்கும் அங்கும் அலைந்து அவன் முன்னுக்கு வர முயன்ற ஆண்டுகளில் அவள் அவனுக்கு உறுதுணையாக இருந்தாள். அவன் மறுத்தானா அதை? இப்போது நிலைமை வேறில்லையா? வியாபார விஷயங்களிலிருந்து சற்று ஒதுங்கி இருக்கச் சொன்னால் இப்படி எல்லாவற்றையும் துறந்துவிட்டுச் செல்பவளைப்போல் ஆயத்தங்களைத் தொடங்க வேண்டுமா? அதுவும் காடு என்ன ஒரு இலக்கு? இவள் சரண் புகக் காடு காத்திருக்கிறதா என்ன? இதிகாசக் கனவுகளைக் காண்பவள்போல் இல்லையா அவள் செய்வது?

இதிகாசப் பெண்கள்கூட அவரவர் கணவன்மார்களுடன்தான் காட்டிற்குப் போயிருக்கின்றனர். வேட்டையாட, சம்ஹாரம் செய்ய என்று தனியாகப் போனவர்கள் இதிகாசப் புருஷர்கள்தான். வன வாசம் செல்லும்படி தந்தை உத்தரவிட்டால் வனம் செல்லும்

ராமனுடன் செல்லும் சீதைப் பதவிதான் பெண்ணுக்கு. நளனுடன் நடக்கும் தமயந்தியாகத்தான் பெண்ணின் காட்டு விஜயம். ரிஷியான கணவனுடன் செல்லும் ரிஷிபத்தினி நிலைதான் பெண்ணுக்கு உரியது. தனியாகப் போனால் தவத்தைக் குலைக்கும் மேனகையாகப் போக லாம். இல்லாவிட்டால் பெண்ணுக்குக் காடு திக்குத்தெரியாத ஒன்று தான். தருக்கள், மான்கள், பூக்கள் அத்தனையும் அவளைத் திசை தப்பவைப்பவைதான். அவளை ரட்சிக்க ஒருவன் வரவேண்டும் பின்னாலேயே. பெண்ணுக்குக் காடு ஒரு தண்டனை. காட்டுக்குப் போவது அவளை அபலையாக்கி ஒதுக்கிவிடும் முயற்சி. இப்படித் தான் திருமலை வாதிட்டான்.

இதிகாசத்தை எல்லாம் மாற்றி எழுத வேண்டிய காலம் வந்தாகி விட்டது என்றாள் சிரித்தபடி. அதற்குத்தானா இந்தப் புறப்பாடு என்று கேட்டான். அதற்கும்தான் என்றாள்.

அந்த வன இலாகா அதிகாரியைத் தொடர்பு கொண்டு அவள் செய்திருந்த விண்ணப்பத்துக்குப் பதில் வந்துவிட்டது. அந்த வனத்தின் அரசு விருந்தினர் விடுதியில் அவள் தங்கலாம் என்று கூறிக் கடிதம் வந்தாயிற்று. சாணிக்கலர் காகிதத்தில் ஓர் அனுமதிக் கடிதம். அதை அவனிடம் காட்டினாள். உச்சுக் கொட்டினான். அவளே எல்லாவற் றையும் தீர்மானித்துவிட்டு கடைசியில் அவனிடம் கூறுவதாகக் கூறினான். ஏதோ அவன் அவளை நாடு கடத்திவிட்டது போல் அவள் நடந்து கொள்வதாகக் கூறினான். வாதப்பிரதிவாதங்கள். மிரட்டல். கெஞ்சல். எல்லாவற்றிக்கும் பிறகு,

"பஸ் ஸ்டாண்ட் ரொம்பத் தூரம். அண்ணாமலை காருல உன்னை விடட்டுமே?" என்றான்.

ஒப்புக்கொண்டாள்.

அண்ணாமலை அவளுடன் வந்தான். பேருந்து வரக் காத்திருந்த போது,

"அண்ணி, என்னை நீங்க தப்பா நினைக்கலியே?" என்றான்.

"சே, சே, அப்படியெல்லாம் இல்ல அன்னு. நீ உங்கண்ணாவோட வேலை பார்க்கிறவன். அவர் சொல்றத நீ ஏத்துக்கிடணும், இல்லையா?" என்றாள்.

பேருந்து வந்ததும் ஏறிக்கொண்டாள். சன்னல் வழியாகப் பார்த்து கையை ஆட்டி விடைபெற்றுக்கொண்டாள்.

பேருந்து வேகம் எடுத்ததும், எதிர்க்காற்று முகத்தில் வந்து மோதியது சமரிடுவதுபோ்ல. கூந்தலைக் கலைத்தது.

ஒட்டக மஞ்சள் அட்டையுடன், வெளேரென்ற பக்கங்களுடன் பெட்டியில் உடைகளுக்கிடையே கிடக்கும் நோட்டுப் புத்தகம்

நினைவுக்கு வந்தது. அடர் கறுப்பில் எழுதும் பென்ஸில்கள் ஒரு டஜன் வாங்கியிருந்தாள். பென்ஸிலைக் கூர்செய்ய கூராக்கி. அழித்தெழுத அழிப்பான்.

ஆரம்ப வரிகளைக் காற்று எழுதிவிட்டுப் போயிற்று.

○ ○ ○

ரதத்தில் பூட்டிய புரவிகள் காற்றுடன் மோதிக்கொள்வது போல் ஓடின. எதிர்காற்று உடலில் மோதியது. இரு பக்க விருட்சங்களும் கூடவே ஓடிவருவதுபோல் தோன்றியது. திடீரென்று தீர்மானித்த பயணம். அடவியின் ஒலிகளும், நிறங்களும் அவள் மனத்தைப் பிறந்தவீட்டுச் சீதனம்போல் நிறைக்கின்றன என்றாள் சீதை லக்ஷ்மணனிடம். அவன் பதில் பேசவில்லை. கைகட்டி காற்றை எதிர்கொண்டான். ரதம் நின்று ரதத்தை விட்டு இறங்கியதும் அண்ணன் உத்தரவு பற்றிக் கூறினான். இனி அந்தக் காடுதான் அவள் வாசஸ்தலம் என்று லக்ஷ்மணன் கூறியதும், சீதை அவனை ஏறிட்டு நோக்கிவிட்டுக் கூறினாள். லக்ஷ்மணன் அறியாதது அல்ல. மற்றவர்கள் தூய்மையைச் சந்தேகிப் பதும், சோதிப்பதுமே அவன் அண்ணனின் தொழிலாகி விட்டது. தொட்டதற்கெல்லாம் சந்தேகம். சாட்சிகளிடம் விசாரிப்பு. சூரியனைக் கூப்பிட்டுக் கேட்பது. அவன் நான் இருக்கும் நேரத்துக்கு நான் சாட்சி, நான் இல்லாத நேரத்துக்கு நான் எப்படி சாட்சி சொல்லமுடியும் என்றால் சந்திரனிடம் கேள்விக் கணைகள். அவன் நான் வானத்தில் இருந்த நாட்களுக்கு நான் உத்திரவாதம் அளிக்க முடியும். அமாவாசை அன்று நான் இருப்ப தில்லை. அந்த இரவுக்கு நான் உத்திரவாதம் அளிக்க முடியாது என்றதும் உடனே நெருப்பை அழைப்பது புனிதத்தை உறுதிப்படுத்த. லக்ஷ்மணனுக்கு இது நேர வில்லையா என்ன? எப்படிப்பட்ட பிரம்மச்சாரி அவன்? எத்தகைய தேஜஸ் கூடிய தேகம் அவனுடையது? சில வனவாசிகள் கிங்ரி என்றழைக்கும் வாத்தியத்தை அவன் தொட்டதுமே, மெல்லமெல்ல, சுகந்தம்போல் எழுந்து பின்பு காட்டருவிபோல் கட்டுக்கடங்காமல் கொட்டும் இசைப் பொழிவில் சிக்காதவர்கள் இருக்கிறார்களா? அந்தக் கந்தர்வப் பெண்ணை லக்ஷ்மணனுக்கு நினைவி ருக்கிறதா? இந்திரசபையின் இந்திரகாமினி? லக்ஷ்மண னின் காமத்தைக் கிளப்ப முயன்று தோற்றதும், தன் வளையல் துண்டுகளையும் காதணிகளையும் சந்தேகம் தோன்றும் வகையில் படுக்கையில் சிதறவிட்டுப் போன வள். காலையில் அறையைச் சுத்தம் செய்ய வந்த சீதை அல்லவா அவற்றைப் பார்த்துவிட்டு ஓடோடிச் சென்று ராமனிடம்

புறம் கூறினாள்? லக்ஷ்மணன் தூய்மையான வன் அல்ல என்று உடனே குற்றம் சாட்டவில்லையா ராமன்? அந்தக் காட்டுக் கிராமத் தலைவனை அழைத்து அங்குள்ள அத்தனை பெண்களும் மீண்டும் சேர்க்கப் பட்ட வளையலையும், காதணிகளையும் அணிந்து பார்க்க வேண்டும் என்று கூறப்பட்டது. ஒரு பெண்ணுக் கும் அது பொருந்தவில்லை. "இன்னும் சோதனையில் பங்கெடுக்காத பெண் உண்டா?" என்று ராமன் வினவ, "இருக்கும் ஒரே ஒரு பெண் சீதாதேவி தான்" என்று தலைவன் கூற, சீதையும் அணிந்து பார்க்க, அவளுக்குப் பொருந்தியது! இந்திரகாமினியின் சூழ்ச்சி. அண்ணனின் அடாத குற்றச்சாட்டுக்கு லக்ஷ்மணன் தந்த பதில் நினை விருக்க வேண்டுமே அவனுக்கு? காட்டில் வாழும் ஒரு குடும்பத்தின் அன்று பிறந்த குழந்தையுடன் நெருப் பில் மூழ்கி எழவில்லையா தன் தூய்மையை நிரூபிக்க? இந்தத் தூய்மைப் பரிசோதனைகள் அவளுக்கு அலுத்து விட்டது. இருக்கட்டும். இந்த வனம் அவளுக்குப் புதியது இல்லை. பிடிக்காததும் இல்லை. போவதற்கு முன் லக்ஷ்மணன், சற்று மேடிட்டு இருக்கும் அவள் வயிற்றைப் பார்க்க வேண்டும். அவன் அண்ணனிடம் கூற வேண்டும் அவள் கர்ப்பவதி என்று. இல்லாவிட்டால் இன்னொரு அக்னிப் பரீட்சைக்கு ஆயத்தங்கள் தொடங்கிவிடும். நேர்க்கோட்டில் செல்லாத மனம் சிலருக்கு. மனம் முழுவதும் குஞ்சிதம் அயோத்தி ராஜனுக்கு.

ரதம் புறப்பட்டது. புரவிகளின் குளம்பொலி வெகு நேரம் வரை காதில் ஒலித்துப் பிறகு அமைதி. அவள் தனியளாய். வீசி அடித்த காற்று உடலில் புழுதியை ஏற்றியது. அவள் தனியளாய். எதிரே ஓடிய ஆற்றை வெறித்தபடி. தன்னைப்பற்றி நினைத்தபடி. தன் பிறப்பை உன்னியபடி.

பனை ஓலையில் எழுத்தாணி அந்த வரியைக் கீறியதும் அருகே நிழல். நிமிர்ந்து பார்த்தாள் சீதை. எதிரே வால்மீகி முனிவர்.

"என்னம்மா எழுதுகிறாய்?" என்றார்.

எழுந்து நின்று வணங்கியபடி, "அயணம்" என்றாள். "சீதையின் அயணம்."

"நான் எழுதிய ராமாயணம் ஒன்று போதாதா?" என்றார்.

"இல்லை. இனி வரும் யுகங்களில் பல ராமாயணங்கள். பல் ராமன்கள். பல சீதைகள்."

பனைஓலைகளைக் கையில் எடுத்து, "இது நான் எழுதாத சீதையா?" என்றார்.

“தாங்கள் அரசவைக் கவிஞர். சரித்திரத்தை உருவாக்குபவர். நான் அனுபவித்தவள். பலவித அனுபவங்களை உள்வாங்குபவள். என் மொழி வேறு.” என்றாள்.

“இது எங்கு அரங்கேறும்?”

“வனங்களில். வனவாசிகள் மனத்தில்.”

○ ○ ○

பெரிய அறை அல்ல அது. ஆனால் அதில் இருக்க வேண்டும் என்ற உணர்வைத் தூண்டுவதுபோல் அமைந்திருந்தது. வலியைத் தணிக்க வைத்துக்கொள்ளும், வெந்நீர் நிரப்பிய ரப்பர் பையின் கதகதப்பின் சுகம் அந்த அறையில் இருந்தது. ஆத்திப் பழுப்பு நிறத்தில் கடும் சிவப்புப் பூக்கள் சொரிந்த கைத்தறி விரிப்புடன் ஒரு சிறிய கட்டில். அதனருகே ஒரு மேசை மற்றும் நாற்காலி. அடிப்படை வசதிகளுடன் ஒரு குளியலறை. எல்லாவற்றையும்விட முக்கியமாக அந்தச் சன்னல். மேசை எதிரே அமைந்த சன்னல். ஏற்றி இறக்கக் கூடிய சட்டங்களுடன் வெளியே திறக்கும் சன்னல்.

பேருந்து அவளை இறக்கும்போது அந்திவேளையின் இறுதிக் கணங்கள். அரசு விருந்தினர் விடுதிக்குப் போகச் சற்று நடக்க வேண்டும் என்று கூறினார்கள். ஒரு சிறு பையன் அவள் பெட்டியைத் தூக்க முன்வந்தான். அந்தியொளியில் சிறுவன் வழிகாட்ட, மரங் களினூடே போடப்பட்ட பாதையில் நடந்து விடுதியை எட்டும்போது இருட்டிவிட்டது. அவள் தன்னை அறிமுகம் செய்துகொண்டதும், விடுதியில் பணிபுரியும் ஒருவர் இந்த அறையைத் திறந்து விட்டார். அவள் அறையை நோட்டமிட்டபடி இருந்தபோது, அந்த விடுதிப் பணியாளர் மேசையின் மேல் சாய்ந்து, எட்டிக் கை நீட்டி, சன்னல் கதவுகளை வெளிப்புறம் தள்ளினார். திடீரென்று அவள் கண்முன் ஓர் இருள் சூழ்ந்த வனம். பாம்பு போலவும் ஒட்டகச் சிவிங்கியின் கழுத்துப் போலவும் கிளைகள் தொங்கியும் உயர்ந்தும் விரிந்த வனம். இனம் புரியாத ஒலிகள். சன்னலின் நட்டநடுவே நூல் கட்டித் தொங்கவிட்டது போல் நன்றாகக் குறுகக் காய்ச்சிய பாலின் நிறத்தில் நிலா. ரகுநாத் பாணிக்ரஹியின் ஜீவன் சொட்டும் குரலில், “நான் தேடும்போது நீ ஓடலாமோ? ஏன் ஊடலோ வெண்ணிலாவே?” பாட்டு மனத்தில் ஓடியது.

இரவுச் சாப்பாடுபற்றி விசாரித்துவிட்டுப் பணியாளர் போனார்.

நிலவைப் பார்த்தபடி நாற்காலியில் அமர்ந்து, மேசை மேல் கைகளை ஊன்றிக் கொண்டாள். பிறகு மேசைமேல் ஏறி, கால்களைப் பக்கவாட்டில் தொங்கவிட்டபடி அமர்ந்து, தலையைத் திருப்பி நிலவையும் அதன் ஒளியைப் பூசிக்கொண்ட வனத்தையும் பார்த்தாள்.

இரவு படுக்கும்முன் ஒட்டக மஞ்சள் நோட்டுப் புத்தகம், ஒரு டஜன் பென்சில்களையும் மற்றவற்றையும் முதுகில் ஏற்றிக்கொண்டு மேசை

மேல் அமர்ந்துவிட்டது. மூடிய சன்னல் கதவுகளின் ஏற்றப்பட்டச் சட்டங்களின் ஊடே நிலவு பல துண்டுகளாகத் தெரிந்தது.

ο ο ο

தாமரை பூத்த தாடகம். அன்னை மடிபோல் அகன்று இருந்த பெரிய தாமரைகள். ஒவ்வொரு தாமரையும் ஆயிரமாயிரம் இதழ்களுடன். பாதுகாவலர்களும் வீரர்களும் புடைசூழ அந்தப் பக்கம் வந்த ராவணன் கண்களில் தாமரைகள் மிதந்த தடாகம் பட்டது. அவற்றின் வண்ணமும் வடிவமும் ஒன்றையாவது பறிக்க வேண்டும் என்ற இச்சையை ஊட்டின. தானே பறிக்க வேண்டும் என்று தோன்றியது. கையில் இருந்த வில்லையும் அம்பையும் அருகில் இருந்த வீரன் ஒருவன் கையில் கொடுத்துவிட்டு, பட்டுடை நனைய, தடாகத்தில் இறங்கியபோது, "நான் உன்னைக் கொல்வேன்" என்றொரு குழந்தைக் குரல் கேட்டது. குரகத்தின் குரல் என்று நினைத்து, தடாகத்தில் அவை உள்ளனவா என்று நோட்டமிட்டான். பேசும் நீர்வாழ் புள் ஒன்றுகூடக் கண்ணில் படவில்லை. ஒவ்வொரு தாமரையைத் தொடும் போதும் அக்குரல் கேட்டது. எந்தத் தாமரையிலிருந்து ஓசை வருகிறது என்று கணிக்க முடியவில்லை. கைக் கெட்டிய தாமரைகளையெல்லாம் பறித்து வந்து, மண்டோதரியிடம் தந்து, தன் காதில் ஒலித்த குரல்பற்றிக் கூறினான். தரையெல்லாம் தாமரைகள். மண்டோதரி அமர்ந்து ஒவ்வொரு தாமரையின் இதழ்களையும் நீவி நீவித் திறந்தாள். கடைசியாக எஞ்சிய தாமரையின் அடி இதழ்களைப் பிரித்தபோது மெத்தென்ற நடுப் பகுதியில் ஒரு பெண் சிசு. மண்டோதரியைத் தன் கரிய விழிகளால் அண்ணாந்து பார்த்து, "நான் ராவணனைக் கொல்வேன்" என்று தெளிவாகச் சொல்லிவிட்டு, மலரச் சிரித்தபடி மீண்டும் சின்னஞ்சிறு குழந்தையின் அர்த்தமற்ற ஓசை களை எழுப்பத் துவங்கியது. மண்டோதரியின் அடி வயிறு கலங்கியது. குழந்தையை ஒரு மூங்கில் பெட்டியில் வைத்தாள். இரு சேடிகளுடன் கடல்புரம் சென்றாள். அலைகளூடே நடந்து மூங்கில் பெட்டியைக் கடலில் இட்டாள். அலைகள் மேல் ஆடியபடி அது சென்றது.

வெகு தூரம் சென்று ஒரு கரையைத் தொட்டது. அதைத் திறந்த முதல் நபர் கூச்சலிட, பலர் சூழ்ந்து கொள்ள, மகவு அவர்கள் தலைவனிடம் ஒப்படைக்கப் பட்டது. அவர்கள் தலைவன் பெயர் ஜனகன். சீதை என்று பெயரிட்டான் குழந்தைக்கு.

சீதை பூவையும், கடலையும், மண்ணையும் தொட்டு வந்தவள்.

ராமன் பிறந்தவுடனேயே ஒரு ஜீவனுக்குத் துயர் விளைவித்தவன். அவன் பிறப்பைக் கொண்டாடத் தரப்போகும் விருந்தில் மான் மாமிசம் இருக்க வேண்டும் என்று கோசலை தீர்மானித்தாள். ஒரு பசிய மரத்தின் அடியே ஓர் ஆண் மானும் பெண் மானும் இளைப் பாறியபடி இருந்தன. பெண்மான் வாட்டமுற்று இருந்தது. "என்ன ஆயிற்று? பசுந்தழைகள் கிடைக்கவில்லையா? தாகமாக இருக்கிறதா?" என்றது ஆண் மான். "இல்லை. தாகம் இல்லை. வேடர்கள் வரும் ஒலி கேட்கிறது. நீ ஓடி விடு" என்றது பெண் மான். அருகே நெருங்கிவிட்ட வேடர்களிடம், "என்னை வேண்டுமானால் கொல்லுங் கள்" என்றது பெண் மான். "ஆண் மானின் மாமிசம் தான் ருசியானது" என்றுவிட்டு ஆண் மானைக் கொன்ற னர். கோசலையிடம் ஓடி, "என் இணைமானின் தோலை யாவது எனக்குத் தா. அதைப் பார்த்தபடி என் துயரை ஆற்றிக்கொள்கிறேன்" என்று இறைஞ்சியது பெண் மான். "அந்தத் தோலை எடுத்து நான் ஓர் அழகிய கஞ்சிரா செய்து, என் பிள்ளை விளையாடத் தருவேன்'' என்றுவிட்டாள் கோசலை.

ராமன் தவழ்ந்து வந்து கஞ்சிராவில் கைவைத்துத் தட்டி ஓசையெழுப்பி விளையாடும்போதெல்லாம் அந்த ஒலி பெண் மானின் உடலை அதிரவைத்தது. ஒலியின் அலைகள் அதன் செவியை எட்டும்போதெல்லாம், "கோசலை, என்னைப்போல் பிரிவில் நீயும் வாடு'' என்று அரற்றியது பெண் மான்.

பனை ஓலையைக் கட்டிவிட்டு நிமிர்ந்தாள் சீதை. சற்றுத் தூரத்தில் லவன் குசன் இருவருக்கும் புத்திரகாமேஷ்டி யாகம்பற்றியும், ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்கனன் பிறப்பு பற்றியும் கூறிக்கொண்டிருந்தார் வால்மீகி.

○ ○ ○

விடிகாலை எழுந்ததும் கால் சோர நடக்க வேண்டும் போல் தோன்றியது. உறுதியான காலணிகளை அணிந்துகொண்டாள். அறையை விட்டு வெளியே வந்ததும் விடுதிப் பணியாளர் எதிர்ப் பட்டார். தேநீர் கொண்டு வரச் சொல்லிவிட்டு, வெளியே வராந்தா வின் படியில் அமர்ந்துகொண்டாள். கடும் பச்சையும், இளம் பச்சையும், வெளிர் பச்சையும் அலையலையாய் விரிந்தது கண்ணுக் கெட்டிய தூரம்வரை. இரண்டு பச்சைகள் மோதிக்கொண்ட ஒரு

பிளவிலிருந்து சூரியனின் மென்சிவப்புக் கிரணங்கள் வெளிப்படுவதும் மறைவதுமாய் கண்ணாமூச்சி ஆட்டம் ஆடிக்கொண்டிருந்தன.

தேநீர் வந்தது.

வாங்கிக் கொண்டு ஊதிஊதிக் குடிக்கலானாள். துளசி மணமும் ருசியும் இதமாக இருந்தது. கோப்பையைத் திருப்பித் தரும்போது, அந்தக் காட்டின் விஸ்தீரணம், எங்கெங்கு நடக்கலாம், செல்லும் வழி இவைபற்றி விசாரித்தாள். கிழக்குத் திசையைத் தேர்ந்தெடுத்து, சூரியனை எதிர்கொள்ள விரைபவள்போல் நடக்க ஆரம்பித்தாள்.

பல கிளைப் பாதைகள் ஒன்றிலிருந்து ஒன்று விரிந்தன. அவற்றி னூடே நடந்து செல்லச்செல்ல, அடர்ந்து விரிந்த மரங்கள் நிழல்போல் கவிந்துகொண்டு ஆகாயத்தை மறைத்தன. சட்டென்று சிலசமயம் வைரப் பொட்டாய் ஒளிரும் ஓர் ஒளிக்கற்றை இலைகளினூடே விரையும். மறையும்.

திடீரென்று ஒரு தண்மை வந்து தொட்டது. எதிரே ஒரு நீரோடை. அதை எட்டும் முன்னர், சடேரென்று நீலமும் பச்சையுமாய் வாலைத் தொங்கவிட்டபடி தாழ்வாகப் பறந்தது ஒரு மயில். அந்த அதிர்ச்சியி லிருந்து மீளும் முன்பு தரையை எட்டி இங்கும் அங்கும் நடந்து பின்பு எதிர்பாரா ஒரு கணத்தில் தோகையை முழுவதும் விரித்து தத்தித்தத்தி ஆடத் தொடங்கியது. அவளுக்கு மட்டுமான ஆட்டம். சிறு வட்டத்துக்குள் நகர்ந்துநகர்ந்து அவளைப் பார்த்தபடி ஆட்டம். சற்றுத் தூரத்தில் ஓடை.

மயிலின் முன் மண்டியிட்டு அமர்ந்து மெல்ல விசிக்கலானாள். புரியவில்லை மயிலே. இலக்கு புரியவில்லை. இலக்கு இருக்கிறதா? இடர்களை விட்டு வரத் தெரிகிறது. தேடல் புரியவில்லை. எதைத் தேட? எப்படித் தேட? தேடுகிறேனா? இன்னும் எவ்வளவு தூரம்? இவ்வளவு தூரம் வந்தும் கனம் இறங்கவில்லை தேகத்திலிருந்து. என் தேகம் லேசாக வேண்டும். காலைத் தரையில் வைத்து ஊஞ்சலை ஆட்ட உந்துவதுபோல் உந்தியதும் நான் மேலே எழ வேண்டும்.

மயில் ஆடிக்கொண்டிருந்தது.

மயிலே, மயிலே, மயிலே, மயிலே . . .

சற்றுத் தூரத்திலிருந்து குரல்கள் கேட்டன.

“ஆயிக! த்யா மோரால பக்!” என்று மயிலைப் பார்த்து ஆச்சரியப் பட்டு,

“கட்டாயம் ரெண்டு தூறலாவது போடும். மயில் தனியா ஆடுது பாரு” என்று மராட்டியில் பேசியபடி பெண்கள் சிலர் வந்து கொண்டிருந்தார்கள். கைகளில் உணவு மூட்டைகள் ஆட வந்தார்கள். ஓடையில் முகம் கழுவினார்கள். தலையில் கட்டிய துணியை உதறி முகத்தைத் துடைத்துக்கொண்டார்கள். கண்ணில் இவள் பட்டதும் வியப்பைக் காட்டினார்கள். உணவு மூட்டைகளைப் பிரித்துவிட்டு அவளை அழைத்தார்கள்.

அவள் அருகில் வந்து அமர்ந்துகொண்டாள். கனமான தினைமாவு ரொட்டி. செக்கச் செவேலென்று துவையல். பூண்டும், மிளகாயும், வறுத்த நிலக்கடலையும், கொப்பரைத் தேங்காயும் கல் உப்பும் போட்டுக் கரகரவென்று அரைத்தது. ரொட்டியைப் பிய்த்து, துவையலை வைத்துத் தந்தாள் ஒருத்தி. வெங்காயத்தை இரு உள்ளங்கைகளில் வைத்து நசுக்கி பாதி வெங்காயத்தைத் தந்தாள் இன்னொருத்தி. நாலைந்து பச்சை மிளகாய்களை இவள் பங்கு ரொட்டி மேல் ஒருத்தி வைத்தாள்.

பலநாள் பழகியவர்கள் போல அவளைப் பற்றிக் கேட்டபடி தங்களைப் பற்றிச் சொன்னார்கள். பெயர்களைக் கூறினார்கள். மீனாபாயி, ருக்மணிபாயி, சவிதாபாயி. துவையலும், வெங்காயம் பச்சைமிளகாய்க் கடியுமாகத் தினைமாவு ரொட்டி தொண்டையில் ருசியுடன் இறங்கியது. சாப்பிட்டு முடிந்ததும், மீனாபாயி இடுப்பிலிருந்த சுருக்குப் பையிலிருந்து புகையிலையை எடுத்து, உள்ளங்கையில் வைத்து, கட்டை விரலால் கசக்க ஆரம்பித்தாள்.

"வேணுமா?" என்றாள் இவளிடம்.

"இல்ல. பழக்கமில்ல. இது உடம்புக்கு நல்லதில்ல தெரியுமா?" என்றாள் செந்திரு.

செந்திரு என்ற பெயரைக் கூற முடியாமல் செந்தியாபாயி என்று இவளை விளித்து,

"ராவ்தே பாயி. உடம்புக்கு நல்லதில்லேனா இத்தனை ருசி அதுக்கு ஏன் அந்த தேவ் வெச்சிருக்காரு?" என்றாள். வாயில் சுரந்த உமிழ் நீரைத் துப்பினாள்.

செந்திருவின் அம்மா கூறும் அதே பதில். அம்மாவுக்கும் புகையிலைப் பழக்கம் உண்டு. எங்கு சென்றாலும் ஒரு வெற்றிலை பாக்கு புகையிலைக் கடையைத் தேடி அவள் கண்கள் அலையும். "வாய் நமநமன்னு இருக்குது" என்பாள். "வேண்டாமே" என்றால், "நான் புகையிலை போட்டா உனக்கு ஏன் உறுத்துது?" என்பாள். அப்பா ஒன்றும் சொல்ல மாட்டார். அவர்தான் சிகரெட் பிடிப்பவராயிற்றே! "தானிகி தீனி சரிப்போயிந்தி" என்பாள் அம்மா தெலுங்கில். தன் பெற்றோர்களுடன் பல இடங்களில் வசித்தவள். கேரளத்திலிருந்து புகையிலையும், ஆந்திரத்திலிருந்து இசைப்பற்றும் வந்தது என்பாள். "நல்ல வேளை செந்தூ, ஆந்திராவுலே சில இடங்கள்ல பெண்கள் பெரியபெரிய சுருட்டுப் பிடிப்பாங்களாம், அந்தப் பழக்கம் வரல உங்கம்மாவுக்கு" என்பார் அப்பா. "இப்பவும்தான் என்ன? க்யூபா லேந்து ஒரு ஹவானா சுருட்டுப் பெட்டி கொண்டாங்க. சுருட்டுப் பிடிச்சுக் காட்டுறேன்" என்பாள் அம்மா. அவளுக்கும் திருமலையின் அம்மாவுக்கும் இதில் ஏக ஒற்றுமை. இடையில் திருமலையின் அம்மாவுக்கு உடம்பு சற்றுச் சுகமில்லாமல் போனபோது செந்திரு அவள் புகையிலையை நிறுத்தினாள். வெற்றிலைப் பெட்டியைத்

திறந்து பார்த்துப்பார்த்துப் பொருமுவாள். "இங்க பாரு, ராசாத்தி. என்னைப் பட்டினி வேணா போடு. புகையிலை இல்லாம அடிக்காத" என்று தாடையைப் பிடித்துக் கெஞ்சுவாள்.

ருக்மணிபாயி பீடியைப் பற்றவைத்து வலிக்க ஆரம்பித்தாள். "ஏய், புகையை என்மேல விடாதே" என்றுவிட்டு, சவிதாபாயி நகர்ந்து கொண்டாள். சற்றுத் தள்ளிப்போய் கையை மடித்துப் படுத்துக் கொண்டாள். இரண்டடி தள்ளி செந்திருவும் படுத்துக் கொண்டாள்.

'செந்தியாபாயி' இங்கே என்ன செய்கிறாள் என்று விசாரித்தாள் சவிதாபாயி. தான் சும்மா தனியாக வந்திருப்பதாகக் கூறியதும், திருமணமாயிற்றா, குழந்தைகள் உண்டா, கணவன் எங்கே என்று தொடர்ந்து கேட்டுக்கொண்டே போனாள்.

பீடி குடித்து முடித்த ருக்மணிபாயி, சவிதாபாயியை அதட்டினாள்.

"ஏய் சவிதாபாயி! உன் புருஷனுக்கு அடுத்த பெண்டாட்டியா தேடறே? கேள்வி மேல கேள்வியா கேட்டுக்கிட்டு!"

"ஆமா. செந்தியாபாயிக்கு கல்யாணம் கட்டற வயசு. அந்தக் குடிகாரனுக்கும் இன்னொரு பெண்டாட்டிதான் கேடு!" சவிதாபாயி எழுந்து உட்கார்ந்து கொண்டு தலையை அவிழ்த்து முடிந்து கொண்டாள்.

செந்திரு சிரித்தபடி எழுந்துகொண்டாள். குழந்தைகள் வெளி நாட்டில் படிப்பதாகவும், புருஷன், குழந்தைகள் எல்லோரையும் விட்டுவிட்டுத் தனியாக இருக்க வந்திருப்பதாகவும் கூறினாள்.

"அப்படியா? சரிதான்" என்றுவிட்டு அவர்கள் போக முற்பட்டார் கள். விடுதிப் பக்கம் வந்தால் அவளைப் பார்ப்பதாகக் கூறிவிட்டு, விறுவிறுவென்று நடந்து போனார்கள்.

மயில் எப்போதோ போய்விட்டிருந்தது. அதன் நடனம் மட்டும் நீலமும் பச்சையுமாய் மனதில் ஓடியது.

விடுதியை நோக்கி நடக்கலானாள்.

மயில்தான் திருமலையின் வியாபாரச் சின்னம். நீண்ட தோகையைத் தரையில் பரப்பிப் பக்கவாட்டில் நிற்கும் ஆண் மயில். திருமலையின் அப்பாவுக்கு விபூதி, குங்கும வியாபாரம்தான். அவர் கள் குடும்பத்தின் குரு போன்ற சாமியார் ஒருவர் தந்த சின்னம் மயில். மயில்கழுத்துப் பச்சை நிறத்தில் ஒரு துணிப்பையில் விபூதி பொட்ட லங்களும், குங்கும டப்பாக்களுமாகத்தான் முதலில் திருமலையைச் சந்தித்தாள். பம்பாயில் இவள் பெரியம்மா வீட்டில் கூடிய பெண் சங்க அங்கத்தினர்கள் ஆர்டர் தந்ததை கொண்டு வந்திருந்தான். மோட்டார் பைக்கில் வெகு தூரம் வந்திருக்க வேண்டும். களைத்திருந்தான். தண்ணீர் கேட்டான் குடிக்க. ஒரு கிளாசில் ஜில்லென்ற நீரும், இன்னொன்றில் எலுமிச்சம்பழ சர்பத்தும் எடுத்துக்கொண்டு போய்க்

கொடுத்தாள் பெரியம்மா கூறியபடி. சகஜமாகச் சிரித்தபடி, "பம்பாய் சுத்திப் பார்க்க வந்தீங்களா?" என்றான்.

"இல்ல. மேல படிக்க வந்திருக்கேன்" என்றாள்.

"என்ன படிக்க?"

"எம்.எஸ்ஸி. டெக்ஸ்டயில்ஸ்."

"செய்யுங்க." கிளாசைக் கீழே வைத்தான்.

"நீங்க என்ன செய்யறீங்க?" என்றாள்.

"வியாபாரம்தான். அப்பாவோட. பி. எஸ்ஸி வரைக்கும் படிச்சேன். அப்பாவுக்கு உடம்பு முடியலை. நான் எறங்கிட்டேன் இதுல. என் தங்கச்சி எம். ஏ. பண்ணுறா."

"எங்க?"

"இங்கதான்" என்றான்.

பெரியம்மா வந்து, "என்ன திருமலை, அம்மாவையும் தங்கச்சியையும் அழைச்சிட்டு வரக்கூடாதா?" என்றாள்.

"இல்ல. அம்மாவுக்கு உடம்பு சொகமில்ல."

"என்ன சொகமில்ல? பாத்து ஒரு வருஷமாச்சுது" என்றாள்.

"சும்மா களைப்புதான். கூட்டியாரேன் ஒரு நாளு" என்றான்.

"இவ செந்திரு" என்றாள் பெரியம்மா.

"பேசிட்டிருந்தோம்" என்றான்.

"வரேன்" என்றுவிட்டுப் போனான்.

மேம்போக்கான உரையாடல்தான். ஆனால் அவன் மனத்தில் நின்றான். நெடுநெடுவென்று உயரம். கரிய மேனி, பளீரென்ற வெள்ளைப் பின்னணியில் மினுமினுத்த கறுப்புக் கண்கள். உதட்டைச் சற்றே மறைத்த மீசை. கடைந்தெடுத்தாற்போல் உடம்பு. உப்பிப் பருக்காத அடக்கமான பிருஷ்டங்கள். கால்சராயின் பின்பாகம் பிதுங்கி வழியாமல், சற்றுத் தொளதொளத்ததுபோல் அதில் மடிப்பு விழச் செய்யும் பிருஷ்டங்கள். ஆண்களுக்குப் பின்பாகம் முறுக்கிக் கட்டினாற்போல் அமுங்கி இருக்க வேண்டும் என்பது இவள் அபிப்பிராயம்.

அப்பாவுக்கு எழுதினாள் அவனைப் பற்றி. அவன் தன் சொந்த வியாபாரத்துக்காக உழைப்பது பிடித்திருக்கிறது என்றாள். அவன் ஆடம்பரமற்ற எளிமை அவளை ஈர்க்கிறது என்று எழுதினாள். கொல்லென்று பூத்த காப்பி மலர்களிடையே இருந்த அப்பாவுக்கு விபூதி குங்கும சமாசாரம் ஒத்துவரவில்லை. கண்டுகொள்ளாமல் இருந்தார்.

இவள் எம்.எஸ்ஸி முடிப்பதற்குள் திருமலையுடனும் அவன் குடும்பத்துடனும் நல்ல பழக்கம் ஏற்பட்டுவிட்டது. மீண்டும் அப்பாவுக்கு எழுதினாள். அப்பா தொலைபேசியில் தொடர்பு கொண்டார்.

"என்ன செந்தூ, காதலா?"

"ம்."

"மீசை இருக்கா அவனுக்கு?"

"ம்."

"என் வீட்டுல ஒரு வில்லு இருக்கு, வந்து முறிச்சாத்தான் கல்யாணம்னுட்டுச் சொல்லிடு."

"போங்கப்பா."

"எப்படி இருக்கான் பாக்குறதுக்கு?"

"பச்சைமா மலை போல் மேனி..." என்று மெல்லப் பாடினாள். அப்பா சிரித்தார்.

மத்தியான வெய்யில் தகிக்காமல் விருட்சங்கள் நிழல் பரப்பின. வேகநடை போட்டு நடந்தாள். மயில் கண்ணில் படவில்லை எங்கும்.

○ ○ ○

முற்றத்தில் தவழ்ந்த போதெல்லாம் குழந்தை சீதை யின் கண்களில் பட்டபடி அது கிடந்தது. அந்த வில். கனமான வில். அதன் மேல் சாய்ந்தபடியும் அதைத் தொட்டபடியும்தான் அவள் நடை பயின்றாள். நினைவு வந்த நாளிலிருந்து அதை சிவன் வில் என்று அறிந்து கொண்டாள்.

பகலிலெல்லாம் காட்டினுள் ஓடியாடுவதுதான் பொழுதுபோக்கு. தேன்போல் இனிக்கும் நீர் உள்ள சுனை, அல்லியும் தாமரையும் பூத்த குளங்கள், நன்றாகப் பழுத்துப் பலாப்பழம் பிளந்து கிடக்கும் மரங்கள், மான்கள் நீர் பருக வரும் ஓடைகள், தேனடைகள் தொங்கும் பாறைகள், ஓய்வெடுக்க வாகான நிழல் பரப்பும் தருக்கள் இவை அனைத்தும் உள்ள இடங்கள் அவளுக்குத் தெரியும்.

ஒருநாள், வீட்டில் இருந்து அன்னைக்கு உதவ வேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டாள். அன்னை ஓய்வெடுக்கும்போது பசுஞ்சாணம் கொண்டு பெரிய முற்றத்தை மெழுக ஆரம்பித்தாள். வில்லின்

அருகில் வந்ததும், ஒரு கையால் வில்லைத் தூக்கிப் பிடித்து, இன்னொரு கையால் அதன் கீழே மெழுக ஆரம்பித்தாள். மெழுகிவிட்டு வில்லைக் கீழே வைக்கும் போது தந்தை உள்ளே வந்தார். வியப்பில் விரிந்தன அவர் கண்கள்.

சாணக் கையுடன் இருந்த அவளை எழுப்பி நிற்க வைத்து அணைத்துக்கொண்டார்.

"யாரும் தூக்க முடியாத வில்லை என் மகள் ஒரு கையால் தூக்கிவிட்டாள். இதைத் தூக்கி முறிப்பவன் தான் உன்னை மணக்கலாம்" என்றார்.

வில்லைத் திரும்பிப் பார்த்தாள்.

வில்லை முறித்தவனைத்தான் மணந்தாள். ஆனால் அவன் அவளுக்குப் புதியவனல்ல. ஒரு மாலை கனிமரங் கள் உள்ள தோட்டத்திற்குக் கனி கொய்யப் போனவள் அங்கு தருக்களின் நடுவே நின்றுகொண்டிருந்த ஒரு யுவனைப் பார்த்தாள். இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். அவன் தன் கைகளை விரித்த போது தன்னையறியாமல் அவன் அணைப்பில் புகுந்து கொண்டாள். பிறகு, தன் கைவளையல்கள் இந்த அணைப்பில் உடைந்தால் அவள் என்ன விளக்கம் தரமுடியும் என்று கூறித் தன்னை அணைப்பிலிருந்து விடுவித்துக்கொண்டாள். வீடு நோக்கி ஓடினாள். வாயிலில் தயங்கி நின்றாள். அவள் கண்கள் ஏன் சிவந்திருக்கின்றன, அவள் முகம் ஏன் வாட்டம் கண்டி ருக்கிறது என்று கேட்டாள் அவள் அன்னை. அன்னை தன்னைக் கடிந்தாலும், தண்டித்தாலும், வீட்டை விட்டே வெளியேற்றினாலும் அதை ஏற்கச் சித்தமாகயிருப்பதாகக் கூறி, அவள் ராமனைக் கனிவனத்தில் சந்தித்ததையும், அவன் அணைப்பில் இருந்ததையும் வெளிப்படையாகக் கூறினாள். அதே ராமன்தான் வில்லை முறித்து அவளை மணக்கப்போகிறான் என்பது உறுதி என்று அவளைச் சமாதானப்படுத்தினாள் அன்னை.

வில்லை முறித்தான். சீதையை மணந்தான்.

விளக்கு ஏற்றும் நேரம் ஆகிவிட்டது. எழுந்துகொண்டாள் சீதை. லவனும் குசனும் தங்கள் வில் அம்புகளோடு உள்ளே ஓடி வந்தனர். ஒரு மான்குட்டியைத் தொடர்ந்து ஓடி, காட்டில் வெகுதூரம்வரை போய்விட்டதாய் மூச்சிறைக்கக் கூறினர். மான் எவ்வளவு அழகு, அதன் கண்களில் எவ்வளவு மருட்சி என்று வியந்துபோயினர். ஓடும்

மானை ஓட விட்டுவிட வேண்டும், துரத்தக் கூடாது என்றாள் சீதை.

○ ○ ○

மாலையில் வந்த தேநீரில் இஞ்சி மணம் வீசியது. காலையில் மேற்கொண்ட நீண்ட நடை உடம்பில் ஒரு சுகமான அசதியை ஏற்படுத்தியிருந்தது. சூடான தேநீர் ஒத்தடம் போல் இருந்தது. மத்தியானத் தூக்கக் கிறக்கம் இன்னும் போகவில்லை.

விடுதிக்குத் திரும்பியவுடனேயே திருமலையுடன் பேச நேரிட்டது. மூன்று முறை தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டதாகவும் அவள் இல்லையென்றதும் கவலைப்பட்டுவிட்டதாகவும் கூறினான்.

"கவலை ஏன் படணும்? நான் கொஞ்ச தூரம் நடந்துட்டு வரலாம்னுட்டுக் கிளம்பினேன். அப்படியே ரொம்ப தூரம் போயிட்டேன்."

"இப்பிடிப் பிசாசு மாதிரி ஏன் அலையணும்? அங்க ஏதாவது புளியமரம் இருக்குதா பாரு. அதுதான் உனக்குச் சரியான இடம்."

"புளியமரத்துப் பிசாசா நான்?"

"ஆமா. முரட்டுப் பிசாசு. மோகினிப் பிசாசு. சாப்பிட்டியா?"

"ம். வழியில நாலஞ்சு ஆம்பிளைகளைப் பாத்தேன். அப்படியே லபக்குனு முழுங்கிட்டேன்."

"முழுங்கறவதான் நீ. என்னை முழுங்கினது பத்தாதா?

"முழுங்கினேன். ஜீரணம் ஆகல."

"ஏனாம்?"

"கொழுப்பு ஜாஸ்தி இல்ல? அதனாலதான்."

சிரித்தான்.

"வுள்ளி, கார்மேகம் ரெண்டு பேரும் ஃபோன் போட்டாங்க" என்றான்.

"என்னவாம்?"

"கார்மேகத்துக்குக் கனடா போகணுமாம் அடுத்த வாரம். அங்க போறப்ப தங்கச்சியைப் பார்ப்பேன்னுட்டுச் சொன்னான். வள்ளியும் அண்ணன் வரப்போகுதுன்னுட்டுச் சொல்லிச்சு. அம்மாவோட பேசணும்னாங்க ரெண்டு பேரும்."

"வெச்சிடவா?"

"ஏன்?"

"பணம் செலவாகுது இல்ல?"

"எப்ப வரதாக?"

"தெரியலை" என்றாள். தனிமையில் அவனைப் பெயரிட்டு அழைப்பதுபோல மீண்டும் ஒருமுறை கூறினாள்: "தெரியலை

திருமலை." வேகமாக மூச்சை உள்ளிழுக்கும் ஓசை எதிர்முனையில் கேட்டது.

"என்னதான் நினைச்சுட்டிருக்க நீ?"

"நான் லேசாகணும். நான் லேசாகணும்."

"இங்க வந்திடு. வந்திடும்மா."

"இல்ல. தனியாத்தான்..."

"தனியா அந்தக் காட்டுலயா?

"ஆமா. காட்டு வழியானாலும் கள்ளர் பயமானாலும்..."

மௌனம்.

தினமும் அழைக்கப் போகிறான். வந்துவிடு எனப் போகிறான். காலணிகளை அணிந்துகொண்டு மேற்குப் பக்கம் நடக்கத் தொடங்கினாள். பத்தாம் மாதமே அவள் நடக்க ஆரம்பித்துவிட்டாளாம். பதினோராம் மாதம் பம்பாயில் பெரியம்மா வீட்டுக்கு வந்திருந்த போது தெருவைக் கடந்து எதிரே சிவாஜி பார்க்கினுள்ளே தனியாகப் போய்விட்டாள். காக்கி உடை அணிந்த சிறுவர்கள் ட்ரில் செய்து கொண்டிருந்தது இன்னமும் நினைவில் இருக்கிறது. எறும்புப் புற்றின் மேல் நின்றுகொண்டிருந்ததும், எறும்பு காலைக் கடித்ததும், அதன் வலியும் மறக்கவில்லை. ஏதாவது ஒன்று என்றால் விடுவிடுவென்று நடக்க ஆரம்பித்துவிடுவாள். "அவ காலை எறும்பு கடிக்குது. அதான் ஓடறா" என்று கேலிசெய்வார்கள் வீட்டில். அம்மா இறந்த போதும், அப்பா இறந்தபோதும் கால்கள் வீங்கும் வரை நடந்தாள். திருமலையும், வெளிநாட்டிலிருந்து வந்திருந்த தம்பியும் வலுக்கட்டாயமாகப் பிடித்துக் கூட்டிக்கொண்டு போனார்கள்.

எங்கு பார்த்தாலும் எறும்புப் புற்றுகள். சற்று வேறுவழியில் போய்விட்டால், சற்று விலகிப் போய்விட்டால் உடனே காலைக் கடிக்கும் எறும்புகள். பல ஊர்களில், வனாந்திரங்களில் பயமின்றி அலையவேண்டும். கிடைக்கும் திண்ணையில் படுக்கவேண்டும். இரவில் தாரகைகள் மின்னும் கரிய வானத்தைப் பார்த்தபடி உரத்த குரலில், அடிவயிற்றிலிருந்து குரலெழுப்பி, எந்த நோக்கமுமின்றி, எந்தக் கடவுளையும் நினைக்காமல், "பட்டுக் கருநீலப் புடவை பதித்த நல் வயிரம், நட்ட நடுநிசியில் தெரியும் நட்சத்திரங்களடீ..." என்றோ, வார்த்தை ஒலிகள், தாளம் இவற்றின் சுகத்துக்காக, காவடிச்சிந்து மெட்டில், "காலமாம் வனத்திலண்டக் கோலமா மரத்தின் மீது காளிசக்தியென்ற பெயர் கொண்டு ரீங்காரமிட்டுலவுமொரு வண்டு" என்றோ பாடவேண்டும். கண்ணில் பட்ட குளத்தில் முங்கியெழ வேண்டும்.

திருமலையின் தந்தை,

தொந்தி சரிய மயிரே வெளிற நிறை
தந்தமசைய முதுகே வளைய இதழ்

தொங்க ஒருகை தடிமேல் வர மகளிர்
நகையாடி . . .

என்று ஆரம்பித்து,

மங்கையழுது விழவே யமபடர்கள்
நின்று செறுவ மலமே ஒழுக உயிர்
துஞ்சு பொழுது கடிதே மயிலின் மிசை
வரவேணும்

என்று உருகிஉருகிப் பாடுவார். எல்லாத் தரிசனங்களும், தேடல்களும், வயதான பிறகுதான். ஆண்களுக்குதான். இவள் ஆயிரம் விளக்கங்கள் தரவேண்டும். சாக்குச் சொல்ல வேண்டும். இல்லை கண்ணனையோ, சிவனையோ வரித்துவிட வேண்டும். “மோரேதோ கிரிதர கோபால”, “வாரணமாயிரம்”, “தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே” என்று தஞ்சமடைந்துவிடவேண்டும். உடனே முக்தி. ஒளியுடன் ஒன்றிப்போகலாம். புஷ்பக விமானப் பயணங்கள் எல்லாம் ஆண் பக்தர்களுக்கு. துகாராமுக்கு வரும். ஜனாபாயிக்குக் கிடையாது. ஸ்தூல வடிவில் தரிசனங்கள், வானூர்தி என்று எந்த இலக்கும் இல்லை அவளிடம். ஏதோ ஒரு விஸ்தரிப்பை அவள் அடைய நினைத்தாள். எல்லா எல்லைகளும் உடைபடும் விஸ்தரிப்பு.

திருமலையின் அப்பா மனிதாபிமானம் உள்ளவர். நாணயஸ்தர். திருமலை ஏதாவது கேட்டால், “வாக்குக் குடுத்திட்டேன் தம்பி” என்பார். அது அவர் வாயிலிருந்து நிதம் வரும் சொல். திருமலையின் அம்மா ஜாடிக்கேற்ற மூடி. அவள் மேற்பார்வையில்தான் விபூதி குங்குமம் தயாராகியது. இவர்கள் திருமணம் நடந்த உடனேயே பெரியவர் பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டார்.

“ஏம்பா, மகன் கல்யாணம் ஆனதும் பொறுப்புலேந்து வெலகிக் கிடுவேன்னுட்டு வாக்குக் குடுத்திட்டீங்களா யாருக்காச்சும்?” என்று கேலி செய்தான் திருமலை.

“ஆமா, குடுத்திட்டேன், உங்க அம்மாவுக்கு” என்றார். செந்திருவை அழைத்து, “இதப் பாரும்மா, ஒரு கதை சொல்வாங்க. தசரதன் கையில் முள்ளு குத்துகிச்சாம். விண்விண்ணுனுட்டு வலி தெறிக்குதாம். தாங்க முடியாம துடிக்கிறப்போ கைகேயி வந்து, மெள்ளமெள்ள முள்ளை வெளியே எடுத்திட்டாளாம். உடனே, எது வேணா தரேன்னுட்டு வாக்குக் குடுத்திட்டாராம். அந்த மாதிரி உன் மாமியார்க்காரி முதுகு தேச்சபோது, தலைக்கு எண்ணெய் வச்சபோது, தலைவலிக்குப் பிடிச்சுவிட்டபோதுன்னு ஏகப்பட்ட வாக்குக் குடுத்திட்டேன். இப்ப கழுத்தை நெருக்குறா. இப்படியே கொடைக்கானல், ஊட்டி, குற்றாலம் அப்படீன்னு ஊர் சுத்தப் போவோங்கறா” என்று கூறிவிட்டுச் சிரித்தார்.

“வெக்கங்கெட்ட மனுசன்” என்று கூடச்சேர்ந்து சிரித்தாள் திருமலையின் அம்மா.

மெள்ளமெள்ள வியாபாரத்தைத் தயார் மசாலாப்பொடியின்புறம் திருப்பிப் பின்பு பட்டுத்துணி, ஆயத்த ஆடைகள் என்று பலவாறு விரிவடையச் செய்யத் திருமலையுடன் அயர்வின்றி உழைத்தாள். ஓட்டப் பந்தயத்தில் எல்லையைத் தொட ஓடுவதுபோல் வியாபாரக் காட்டினுள் ஓட்டம் ஒரு பதினான்கு ஆண்டுகள். கனடா வரை எட்டியாகி விட்டது. முற்றிலும் வேறுபட்ட தோல் வியாபாரத்தில் கடந்த எட்டு ஆண்டுகள். தோல்பை, பெட்டி, கைப்பை, தோள்பை, சில்லறை வைக்கும் சிறுபை என்று இவளாக முன்நின்று பெருக்கினாள் வியாபாரத்தை. அதில் அவளைச் சமபங்குக் கூட்டாளியாக்குவதாகப் பேச்சு. அது முடியாமல் போயிற்று. உடனே ஒரு வெறி வந்தது நடக்க. நீண்டநீண்ட தூரம் நடக்க. வியாபாரத்திலிருந்து புறக்கணிக்கப்பட்ட அந்த நிகழ்வு ஒரு காரணமில்லை. நிமித்தம்தான்.

எதிரே சூரிய அஸ்தமனம் ஓர் ஒலியில்லா நாடகம் போல் நிகழ்ந்துகொண்டிருந்தது. வண்ணக் கலவைகளை வானில் பூசிவிட்டு, மிகமிக மெள்ள இறங்கிக் கொண்டிருந்த சிவப்பு உருண்டை திடீரென்று காணாமல் போயிற்று. வானில் அதன் ஈவு. உட்கார்ந்து கொண்டாள். நேரம் போனது தெரியவில்லை. பேச்சுக் குரல்கள் கேட்டன.

ருக்மணிபாயும், சவிதாபாயும் குடங்களோடு வந்து கொண்டிருந்தனர். வீட்டில் குடிக்கும் தண்ணீர் தீர்ந்து விட்டதாம். அவர்களுடன் நடந்தாள். அருகிலேயே ஒரு சிறு பள்ளத்தில் நீர். கட்டிவைத்தது போல், அசைவு இல்லாமல் தெளிவாய்த் தெரிந்தது. நிலா வெளிச்சத்தின் ஒளிக்கற்றைகள் சிதறிக் கிடந்தன அதன்மேல். ஒளிக்கற்றைகளின் இடையே நிலா சுத்தமாகத் தெரிந்தது. நிலவைப் பிடித்து வைத்துக்கொண்டு நின்றது நீர். ருக்மணிபாயி குடத்தை முக்கியதும் நிலவு கலைந்து சிதறி நீரெங்கும் ஓடியது. குடத்தை நிமிர்த்தி வைத்ததும் அதன் குறுகிய வாயினுள் நிலவு. சவிதாபாயி தன் குடத்தை முக்கி விட்டு நிமிர்த்தினாள். அதனுள்ளும் நிலவு மிதந்தது. பள்ளத்திலுள்ள நீர் மீண்டும் எந்த அசைவும் இல்லாமல் நிலவுடன் கிடந்தது.

சவிதாபாயுடனும் ருக்மணிபாயுடனும் திரும்பி விடுதி நோக்கி நடக்க ஆரம்பித்தாள். அவர்கள் இடுப்பில் இருந்த குடங்களில் மிதந்தபடி வந்தது நிலவு. இடையில் அவள் தாகம் என்றதும் ஏந்திய அவள் கைகளில் நீரை சவிதாபாயி ஊற்ற, நிலவு அவள் கைகளில் ஒரு வினாடி அடங்கி, சிறிது வாயினுள் போய், சிறிது விரல்களூடே வழிந்து போயிற்று. ஏந்திய கைகளில் உள்ள நீரில் நிலவை அவள் ஒரு வினாடி பார்த்துவிட்டு, தண்ணீரைக் குடித்த பின்பு பார்வையைக் குவிந்த கைகள் மேல் மீண்டும் ஓடவிட்டதும், சவிதாபாயி சிரித்தாள்.

"போயிட்டது பாயி. தண்ணி இல்லேன்னா சந்திரமாவும் இல்ல" என்றாள்.

ஆமாம். காட்டில் உள்ள சிறு வீடுகளின் திறந்த முற்றத்தில் உள்ள தண்ணீர்க் குடங்களிலோ, தண்ணீர் ஒழுகித் தேங்கிய குட்டை

களிலோ எண்ணற்ற நிலவுகள். ஒரு சிறு பாத்திரத்தை வைத்தால் அதில் கூட பைசா அளவு நிலவு மிதக்குமோ என்னவோ. தண்ணீர் இருக்கும்வரை மிதக்கும் நிலவுகள். அள்ளஅள்ள நீரில் வந்து, ஒழுகஒழுக ஓடிவிடும் நிலவுகள். ஆகாயத்தினின்றும் இறக்கப்பட்ட நிலவு. விஸ்தரிப்பு. நிலவின் விஸ்தரிப்பு. உடலில் ஒரு தண்மை பரவியது. நிலவை உண்டவள் அவள். உண்டுவிட்டு, வானில் மீதமும் வைத்தவள்.

விடுதியை எட்டியதும் விடைபெற்றுக்கொண்டு விரைந்தனர் அவர்கள் இருவரும். சாப்பாட்டு அறையில் அவளுக்கான உணவு மூடி வைக்கப்பட்டு இருந்தது. சாப்பிட்டுவிட்டு அறைக்குப் போய் விளக்கைப் போட்டாள். மேசையின் முன் அமர்ந்தாள்.

O O O

வாழ்வின் பெரும் பகுதி அடவியில் கழிந்துவிட்டது சீதைக்கு. பூக்களையும், பழங்களையும் இலைகளையும் கொய்து விளையாடிய சிறுமிப் பருவத்தின் வனம் பல ரகசியங்களை உள்ளடக்கிய அற்புதமாக இருந்தது. பிறகு கணவனுடன் வாழ்ந்த புகலிடம். பல அனுபவங்களை உருவாக்கிய இடம். வெகுளிப் பெண் சீதை. குளத்தில் குளிக்கப் போனபோது, தெள்ளென்ற நீரில் தன் உருவத்தைப் பார்த்து முதல் முறை ஓடோடி வந்து குளத்தினுள் நிலவும், தேனீக் கூட்டமும் இருப்பதாக வந்து கூற, ராமன் அவளுடன் வந்து, அது அவள் முகம், தேனீக்கூட்டம் என்று அவள் நினைத்தது சுருண்டு சுருண்டு பறந்த அவள் கூந்தல் என்று சொல்ல வேண்டியதாயிற்று. இன்னொரு முறையும் அது நடந்தது. இந்த முறை தெளிந்த நீரில் தெரிந்த முகம் பிரகாசமாக இருந்தது. வனப்பு மிகுந்து இருந்தது. ராமனுடன் சண்டையிட ஓடினாள். ஏக பத்தினி என்று கூறுவதெல்லாம் எவ்வளவு பொய், இன்னொரு பெண்ணை அவன் மறைத்து வைத்திருக்கிறான் என்று குற்றம் சாட்டினாள். ராமன் மீண்டும் அவளுடன் வந்து முதலில் அவளை நீரில் பார்க்கச் சொன்னான். அந்தப் பெண்ணின் எழிலுருவம் தெரிந்தது. அந்தப் பெண்ணின் மணாளனைக் காட்டுகிறேன் என்று கூறி அவன் அவளருகில் வந்து நிற்க, அப்பெண்ணின் உருவத்தின் அருகே ராமனின் உருவம் தெரிந்ததும் தன் உருவம் புரிந்தது. வெட்கினாள். அவன் முழுவதும் தனக்குரியவனாக இருக்க வேண்டும் என்று நினைத்தாள் அவள். சிறையிருந்ததும் ஒரு வனம்தான். இப்போது அடைக்கலமாகி இருப்பதும் வனம்தான்.

எவ்வளவு தீவிரத்துடன், மகவின் பிடிவாதத்துடன் அவள் ராமனை மட்டுமே நினைத்திருந்தாள் அந்த வனச்சிறையில்? யுத்தம் முடிந்த அன்று போர்க்களத்தில் பலர் எதிரே ராமன் கூறியது என்ன? அனுமன் மூலம் அலங்கரித்துக் கொண்டு வரும்படி கூறியதும் அசோக வனத்தில் எப்படி இருந்தாளோ அப்படியே வருவதாகத் தானே அவள் கூறினாள்? வற்புறுத்தி அலங்கரிக்கப் பட்டபோதுகூட அங்கிருந்த எதிலும் அவளுக்கு நாட்ட மில்லை. மரத்தின் கீழே அவள் அமர்ந்திருந்த இடத்தின் அருகே ஒரு கல் இருந்தது. உடலெல்லாம் வரண்டு போய், மீட்கப்பட்டு அயோத்தி செல்லும் நாளை எண்ணி ஏங்கும்போது, சந்தனம் அரைக்க அந்தக்கல் எவ்வளவு உபயோகமாக இருக்கும் என்று எண்ணியதுண்டு. அதை அனுமனிடம் கூறியதும் அவன் கல்லைக் கெல்லி எடுக்க முயன்றான். பெரியவர் ஜாம்பவான் தடுத்து, விபீஷணனி டம் நாட்டைத் தந்தாகி விட்டது, அதிலிருந்த எதுவும் அவள் கேட்காமல் பெறக்கூடாது என்ற பொருளில், கொடுத்துவிட்ட ஒன்றைத் திரும்ப வாங்கக் கூடாது என்றார். மானையும், கனியையும், பூவையும் இச் சித்த பெண் அவள். ராச்சிய சுகங்களைத் துறந்தவள். காட்டையே துணையாக்கிக் கொண்டவள். அத்தனை பெரிய இலங்கையிலிருந்து ஒரு கல்தான் வேண்டும் என்று கேட்டாள். ஓர் அரசகுமாரியின் கம்பீரத்துடன் அவள் நடந்துகொள்ளவில்லை என்று சொல்கிறாரோ என்று வெட்கப்பட்டாள்.

பலர் இறந்து கிடந்த பெரிய போர்க்களத்தில் அவள் கால்கள் பின்னிக்கொண்டன. தான் ஒருத்தி மீட்கப் படவா இத்தனை சாவு என்று எண்ணினாள். பலர் முன்னிலையில் ராமன் தன்னை ஒரு காட்சிப் பொருளாக்குவதாகத் தோன்றியது. யார் கண்ணிலும் படாமல் பாதுகாப்புடன் அசோகவனத்தில் இதுகாறும் இருந்தவள், எல்லாப்புறமும் திறந்து கிடந்த போர்க் களத்தில், சண்டையிட்ட களைப்புடனும், காயத்துட னும் நின்ற, அவள் அறியா பல ஆண்கள் நடுவே, அவளைப் பார்க்க முந்தும் கூட்டத்தின் இடையே எந்தத் துயரும் படாதவள் போல் அலங்கரித்துக் கொண்டு, 'மீட்கப்பட்டவள் நான்' என்று பிரகடனப் படுத்திக்கொண்டு சென்றாள். அத்தனை அலங்காரமும் ராமனை மகிழ்விக்க அல்ல என்று பிறகு தெரிந்தது. அவளைச் சுற்றி எட்டுத் திக்குகள் இருப்பதாகவும் அவள் எந்தத் திக்கிலும் யாருடன் வேண்டுமானாலும் செல்ல லாம் என்றும் கூறினான் ராமன். அவன் போரிட்டது

அவளை மீட்க அல்ல, அவன் குலப்பெருமையைக் காக்க என்றான். லக்ஷ்மணன், பரதன், விபீஷணன், சுக்ரீவன் இவர்களில் யாருடன் வேண்டுமானாலும் அவள் வாழலாம் என்றான். அவளை அரசகுமாரிபோல் நடந்து கொள்ளப் பணித்த ஜாம்பவான்களின் நாக்கு அப்போது அசையவில்லை. தன் குலப்பெருமையை கூறியவன் அவளும் ஒரு பெருமை வாய்ந்த குலத்தவள் என்பதை மறந்துவிடவில்லையா? அவனுக்குப் போர் செய்ய வேண்டிய அவசியத்தை உண்டாக்கியது அவள் அந்தப் பெருமையைக் காக்க நினைத்ததால்தானே? இல்லாவிட்டால், அவளை அன்னைபோல் கருதிய அனுமனின் தோளில் அமர்ந்து அவள் இலங்கையை விட்டு வந்திருக்கமாட்டாளா?

அனுமன் இலங்கைக்குத் தீ மூட்டினான். ராமனால் செய்யக் கூடியது துணைவி மனத்தில் தீ மூட்டுவதுதான். அத்தனை நாட்களின் பிரிவுக்குப் பின்பு தன்னைப் போற்றிய லக்ஷ்மணனிடம் அவள் கூறிய முதல் சொற்கள், “லக்ஷ்மணா, தீ மூட்டு” என்பதுதான்.

எழுதி முடித்த பிறகும் அந்தக் கணம் மனதில் கனத்தது. சற்றுத் தூரத்தே லவனும் குசனும் அகலிகை சாப விமோசனக் கதையை வால்மீகி சொல்லக் கேட்டுக்கொண்டிருந்தனர். ஒரு நிகழ்வு, வதந்தியாகி, கதையாவதற்குள் எவ்வளவு மாற்றங்கள்! அகலிகையின் மனம் இறுகிப்போனது. ராமனின் பாதங்களை அவள் பணிந்ததும் அவள் மனம் இளகி மீண்டும் ஜீவ ஊற்றின் ரசங்கள் அதில் பொங்கின. ஆனால் கல்லைப் பெண்ணாக்குவதில் இன்னும் அதிக அற்புதம் கலந்த நாடகத்தன்மை இருக்கிறது என்று நினைத்தபடி எழுந்தாள்.

○ ○ ○

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு எல்லாத் திசைகளிலும் பல முறைகள் நடந்தாகிவிட்டது. நடக்கநடக்க முதுகின் அடியில் ஒரு குறுகுறுப்பு ஏற்பட்டது ஏதோ ஒன்று முளைக்க முற்படுவது போல. இரவில் படுக்கும்போது அது உடம்பெங்கும் பரவித் தாலாட்டியது. கிழக்கே மயில் ஆடிய ஓடையைத் தாண்டி ஒரு சிற்றருவி இருப்பதாகச் சொன்னார்கள். ஒருநாள் சிற்றருவியைச் சந்திக்கப் புறப்பட்டாள். உலர்வதற்காகத் தொங்கவிடப்பட்ட கூந்தல்போல் அடக்கமான அருவி. அமர்ந்து பார்த்தபடி இருந்தபோது அருவியின் முனையில் ஒரு முகம் தெரிந்தது. சூரிய ஒளியில் உடம்பு பொன்போல் தகதகக்க, நீர் குடித்துக்கொண்டிருந்தது ஒரு மான். சிறிது குடித்துவிட்டு, தலையை அசைத்து நாற்புறமும் பார்த்தது. பிறகு மீண்டும் குடித்தது. மீண்டும் நிமிர்ந்தபோது இவளைப் பார்த்து விட்டது. துள்ளியது. மஞ்சள் புயலொன்று சுழன்று செல்வதைப்போல் ஓடியது.

மெல்ல அருவி முனைக்குச் சென்று மான் குடித்த இடத்தில் குப்புறப் படுத்துக்கொண்டாள். வயிற்றை எக்கிக்கொண்டு அருவி நீரைக் குடித்தாள். மான் குடித்தது போலவே. வயிற்றினுள் நீர் இதுவரை அனுபவிக்காத ஒரு பாதையில் ஓடியது. தாகம் தணிந்ததும் திரும்பிப் படுத்தாள். மேலே ஆகாயம். வெளிர் நீலமாய். தோளிலிருந்த துப்பட்டா துணி காற்றில் பறந்து முகத்தின் மேல் விழுந்தது. அதனூடே ஆகாயத்தை வெறித்தாள். கண்ணைச் சொக்கியது தூக்கம்.

ரயில் வண்டியைப் பிடிக்க ஓட்டம். பாதைகளெல்லாம் ஏன் இப்படி மலையும் மடுவுமாக இருக்கிறது? யாரோ துரத்துவதுபோல் பயம் மனத்தினுள். குளம்பொலி கேட்டது. இந்த நகர வீதியில் குதிரைகளா? ரயில் நிலையத்தை எட்டிவிட்டாள். கம்பிப் பிடியைப் பிடித்துக்கொண்டு ஏறியாகிவிட்டது வண்டிக்குள். மூச்சு இறைத்தது. அமரும் முன் இன்னொரு ரயில் நிலையம் வந்துவிட்டது. சன்னல் வழியாகப் பார்த்தபோது சற்றுத் தூரத்தில் ஒரு பெஞ்சின் மேல் அப்பா உட்கார்ந்திருந்தார்.

"அப்பா, அப்பா, எப்படிப்பா இங்க?"

"உனக்காத்தான் காத்திட்டிருக்கேன்."

"எனக்காகவா?"

"ஆமா." அப்பா மூக்குக் கண்ணாடியை ஒரு கையால் சரி செய்தபடி அவளைப் பார்த்துச் சிரித்தார்.

"நான் எறங்க முடியாதுப்பா."

"ஏன்?"

"சாமான் இருக்குதுப்பா."

அப்பா சிரித்தார். கையை நீட்டினார் அவள் பக்கம். அவர் கையை நீட்டியபடி இருக்க வண்டி நகரத் தொடங்கியது.

"அப்பா, அப்பா.."

திடீரென்று ஒரு வரி கூட சுஸ்வரமாகப் பாடத் தெரியாத அப்பா, சப்ளாக்கட்டையுடன் பாடுபவர்போல் அபிநயித்து, குதித்துக் கொண்டே பாட ஆரம்பித்தார். அவளுக்கு முதல்முதல் பாட்டுக் கற்றுக் கொடுத்த ராமச்சந்திர பாகவதரின் குரலில் பாட்டு வெளிப் பட்டது அப்பாவின் தொண்டையிலிருந்து. பின்னணியில் வீணையின் ஓசை. புரந்தரதாசரின் தேவர்நாமா.

"நானேக்கே படவனு, நானேக்கே பரதேசி?"

ரயில் நிலையம் ரயிலுடன் நகர்ந்து வந்தது.

ராமச்சந்திர பாகவதர் குருடர். வீணையும் பாட்டும் வீடுவீடாகப் போய்க் கற்றுக் கொடுப்பார். முதலில் அவர் வந்தபோது அம்மா, "ஒரு பாட்டுப் பாடுங்க" என்றாள். அம்மைத் தழும்பு முகத்தில் ஒரு கீற்றுப் புன்னகை பரவியது. வீணையில் சுருதி சேர்த்து, பாடிக் கொண்டே வாசித்தார். "நானேக்கே படவனு, நானேக்கே பரதேசி?"

நானா ஏழை? நானா பரதேசி? புரந்தரவிட்டலன் எனும் அரிய செல்வத்தைப் பெற்ற நான் ஏன் ஏழை, நான் ஏன் பரதேசி? சிந்துபைரவியில் அமைந்த பாடல். ஏற்ற இறக்கங்கள், வளைவு சுளிவுகள் இவற்றின் ஜாலம் உடையது சிந்துபைரவி. இந்தப் பாடலில் எந்த ஜால வித்தையும் இல்லாமல் வழுக்கும் நேர்பாதை.

லீவு நாட்களில் மத்தியானம் சாப்பிட்டுவிட்டு உறங்க நினைக்கும் வேளையில்தான் அவர் வருவார். ஒரு பையன் கையைப் பிடித்து அழைத்து வருவான். மத்தியானத் தூக்கம் போன கோபத்துடன் பாவாடையை உதறிவிட்டு இசை பயில இவள் உட்கார்ந்ததும் வீணையை மீட்டுவார். "யாத்தக்கம்மா கோபா?" என்று அன்பொழுகும் குரலில் கேட்பார். தொப்பு தொப்பென்று ஒன்றன் மேல் ஒன்றாக மனத்தில் விழுந்தன அத்தனை விவரங்களும், நினைவுகளும். வெறும் சொற்களாகவும், பிம்பங்களாகவும், இணைந்தும், கலைந்தும், மிதந்தும். துண்டுதுண்டுகளாக; உடைந்துஉடைந்து. சன்னல் வெளியே அப்பா பாடியபடி.

குதித்துக்கொண்டு பாடிக்கொண்டிருந்த அப்பா குருடர் போல் தடுமாறினார். ரயில் வண்டி வேகம் எடுத்தது. ரயில் நிலையம் ஓர் இடத்தில் நின்றுவிட்டது. காற்றைக் கையால் துழாவியபடி வெகு தூரத்தில் ஒரு சிறு பொட்டாக அப்பா. பாட்டு மட்டும் செவியருகே, நானேக்கே, நானேக்கே என்று ஒலித்தபடி.

சன்னலின் வெளியே கையை நீட்டினாள், முகத்தைக் கம்பிகளின் மேல் அழுத்தியபடி.

"அப்ப . . . அப்பா . . ."

"பாயி, செந்தியாபாயி . . ." என்ற குரல் கேட்டது.

சட்டென்று விழிப்பு வந்தது. ருக்மணிபாயி, மீனாபாயி, சவிதாபாயி மூவரும் கீழே படுத்திருந்த அவளைக் குனிந்து பார்த்தபடி நின்று கொண்டிருந்தார்கள்.

"காய் ஜால பாயி?" என்றாள் மீனாபாயி.

எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

அவர்கள் அவளைத் தேடிக்கொண்டுதான் வந்திருந்தார்களாம். அவளைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துப்போக விரும்பினார்கள். மூவரின் கணவன்மார்களும், குடும்பத்தினரும் ஊரில் இல்லையாம். நால்வருமாக நடக்க ஆரம்பித்தனர். கனவிலிருந்து முழுவதும் மீளாமலேயே நடந்தாள் செந்திரு. கனவின் நீட்சி போலவே தோன்றியது.

சவிதாபாயினுடைய வீடுதான் சற்றுப் பெரிய அறையைக் கொண்டது. அதனுள் நுழைந்தனர். விளக்கை ஏற்றினாள் சவிதாபாயி. பின்கதவைத் திறந்தாள்.

வீட்டைத் துப்புரவாக வைத்திருந்தாள் சவிதாபாயி. அறையின் வலதுபக்கம் இரண்டு டிரங்குப் பெட்டிகள். இடதுபக்க மூலையில்

ஒரு ஸ்டவ்வும், விறகடுப்பும். பின்புறக் கதவு பாதி திறந்திருந்தது. வெளியே வாழை மரங்கள். செடியில் உலர்த்திய துணிகள். மீனா பாயும், ருக்மணிபாயும் அவரவர் வீட்டுக்கு ஓடினர் எதையோ கொண்டு வர. சற்று நேரத்தில் வந்தனர். அதற்குள் ஸ்டவ் மூட்டி சவிதாபாயி தேநீர் தயாரித்துவிட்டாள். நால்வரும் எதிரும் புதிருமாக அமர்ந்து கொண்டு தேநீர் குடித்தனர். அன்றைக்கு என்ன விசேஷம் என்றதும், அதெல்லாம் ஒன்றுமில்லை என்றும், இப்படி எப்போ தாவது அவர்கள் கூடுவது வழக்கம் என்றும் சொன்னார்கள். மீ னாபாயி, ருக்மணிபாயி இருவரின் கணவன்மார்களும் அவர்களை விட்டு இந்தப் பக்கம், அந்தப் பக்கம் நகர்வதே அபூர்வம் என்று கிண்டல் செய்தாள் சவிதாபாயி. பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் திருமணம் ஆகி, அவர்கள் கூட தாத்தா பாட்டிகள் ஆகப்போகிறார் கள். அப்படியும் இப்படிப் பிடித்துக் கொண்டு அலையும் புருஷன் மார்கள் என்று பரிகாசம் செய்தாள்.

"சும்மா இரு" என்று அதட்டினாள் அவளை ருக்மணிபாயி செல்லமாக. ஒரு தட்டு போட்டு மூடிக்கொண்டுவந்திருந்த சிறு அலுமினியப் பாத்திரத்தைத் திறந்தாள். மசாலா தடவப்பட்ட மீ ன் துண்டுகள் மஞ்சளும் சிவப்புமாய். சவிதாபாயி விறகடுப்பை மூட்டி ஆழமில்லாத வாணலி ஒன்றைப் போட்டு எண்ணெயை ஊற்றினாள். மீனாபாயி அடுப்பருகே நகர்ந்து மீன் துண்டுகளைப் பொறிக்க ஆரம்பித்தாள். சவிதாபாயி வெங்காயம், பச்சை மிள காய் இரண்டையும் அரிந்து ஒரு தட்டில் வைக்க ஆரம்பித்தாள். ஸ்டவ்வை இன்னொரு தடவை மூட்டி, சப்பாத்திக் கல்லைப் போட்டாள் ருக்மணிபாயி. மீனாபாயி பிசைந்து கொண்டுவந்திருந்த தினை மாவிலிருந்து மாவை எடுத்து உருட்டி அடுப்பில் இருந்த சப்பாத்திக்கல் மேல் வைத்து, அடிக்கடி தண்ணீரில் கையை முக்கி, தட்டித்தட்டிச் சுட ஆரம்பித்தாள் ருக்மணிபாயி. துவையல் அரைக் கும் வேலை செந்திருவினுடையது ஆகியது. துவையல் அரைத்தபடி ருக்மணிபாயி பாக்ரி தட்டுவதைப் பார்த்தாள். அவள் வாய் ஒரு பாட்டை முணுமுணுத்தபடி இருந்தது. உற்றுக் கேட்டபோது அது பக்தை பஹினிபாயியின் 'அரே ஸன்ஸார, ஸன்ஸார' பாடல் என்று தெரிந்தது. சம்சாரம் என்பது அடுப்பில் வைத்த பாக்ரி சுடும் கல்; கையை முதலில் சுட்டுக்கொண்ட பிறகுதான் பாக்ரி கிடைக்கும் என்று பஹினிபாயி பாடியது. பாக்ரி சுடும் லயகதியிலேயே இருந்தது பாடல்.

எல்லாம் முடித்த பின்பு, கோதுமை மாவை எண்ணெய் விட்டுப் பிசைந்து துணியால் மூடி வைத்திருந்த தாம்பாளத்தை இழுத்து நடுவில் வைத்தாள் சவிதாபாயி. மசித்த கடலைப் பருப்பும், வெல்ல மும், தேங்காயும் கலந்த பூரணத்தை எடுத்தாள். கும்மென்று ஏலக்காய் மணம் வீசியது. முதலிலேயே ஒத்திகை பார்த்து வைத்துக்கொண்ட வர்கள் போல எண்ணெயில் அவ்வப்போது விரலை முக்கி எடுத்து பூரன்போளி தட்ட ஆரம்பித்தனர் நால்வரும். கொஞ்சம் தட்டுவதும்

போட்டு எடுப்பதுமாய் பரபரவென்று இயங்கினாள் சவிதாபாயி. வெல்லமும் தேங்காயும் காயும் மணம் அறையில் பரவியது. பூரன் போளிகளை ஒரு சிறு அடுக்கில் வைத்து மூடினாள் சவிதாபாயி. மற்ற இருவரும் பின்பக்கம் விரைந்தனர். கிணற்றிலிருந்து நீர் இறைக்கும் சத்தம் கேட்டது. செந்திருவும் பிடிதுணியில் கையைத் துடைத்துவிட்டு எழுந்தாள். மற்ற இருவரும் இடுப்பைச் சுற்றி இறுகக் கட்டியிருந்த புடவைத் தலைப்பை அவிழ்த்துப் பிரித்து, முகத்தைத் துடைத்தபடி வந்தனர். சவிதாபாயி பின்கதவை நோக்கிப்போனாள். ஒரு லோட்டா தண்ணீரைக் குடித்தாள் மீனாபாயி. செந்திருவும் ஒரு லோட்டா நீரைப் பருகுவதற்குள் சவிதாபாயி வந்துவிட்டாள். செந்திரு வீட்டின் பின்புறம் போனபோது உடன் வந்து ஒதுங்குவதற்கான இடத்தைக் காட்டினாள் சவிதாபாயி. கிணற்றடியில் ஒரு வாளியில் தண்ணீரும், கிணற்றுக் கைப்பிடிச்சுவரில் சோப்புத் துண்டும் இருந்தது. குளிர்ந்த நீரை முகத்தில் வாரிவாரி அடித்துக்கொண்டாள். சோப்பைக் குழைத்து முகத்தில் பூசி மீண்டும் தண்ணீரால் முகம் கழுவியதும் இதமாக இருந்தது. துப்பட்டா துணியால் முகத்தைத் துடைத்தபடி எதிரே பார்த்தபோது வாழை மரங்கள், செடிகள், மூலையில் நின்ற வேப்பமரம் எல்லாம் இருளில் கோட்டோவியங்கள் போல் தெரிந்தன.

"செந்தியாபாயி . . ." என்று உள்ளேயிருந்து அழைப்பு வந்தது.

உள்ளே மூவரும் கூந்தலை இறுக்கி முடிந்தபடி இருந்தனர். நன்றாகக் கழுவிய முகத்தில் நெற்றியிலும், தாடையிலும் இருந்த பச்சைக்குத்து மினுமினுத்தது. கால்களை நீட்டிக்கொண்டு சுவரில் விச்ராந்தியாய் சாய்ந்துகொண்டனர். இவளும் உட்கார்ந்ததும் வறுத்த மீன் வைத்த தட்டை நடுவில் வைத்தாள் மீனாபாயி. ருக்மணிபாயி இரண்டு குப்பிகளை ஒரு பையிலிருந்து எடுத்து வைத்தாள் நடுவே.

"பனங்கள்" என்றாள்.

மற்ற இருவரும் கிளாஸ்களை வைத்தனர்.

"செந்தியாபாயிக்கு பனங்கள் குடிச்சுப் பழக்கம் உண்டா?" என்றாள் ருக்மணிபாயி.

முருட் – ஜஞ்ஜீரா கோட்டையைப் பார்க்கப் போன அந்த இரவிலும் பனங்கள் இருந்தது. இரண்டு கார்களில் நண்பர்களுடன் மற்றும் குழந்தைகளுடன் அலிபாக் போனார்கள். அங்கிருந்து முருட் – ஜஞ்ஜீராவுக்கு. கடல் நடுவே கோட்டை. கடற்கொள்ளைக் காரர்களின் ராச்சியமாக இருந்த கோட்டைத் தீவு. கோட்டைக்குப் போகும் படகுகளில் ஏறப் படகோட்டிகள் இவர்களைத் துரிதப் படுத்தினார்கள். இரண்டு படகுகளில் கோட்டையை எட்டிவிட்டனர். பாழடைந்து கிடந்த கோட்டையைச் சுற்றிலும் மலைப்பாம்பு போல் கனத்த சங்கிலிகள். கோட்டையைச் சுற்றிப் பார்த்துவிட்டுச் சீக்கிரம் வரும்படி படகோட்டிகள் அவசரப்படுத்தினார்கள். வேகவேகமாய்ச் சுற்றிப் பார்த்துவிட்டு, திருமலையும் குழந்தைகளுமாக ஒரு படகு போய்விட்டது. பதினைந்து நிமிடங்களில் மற்றவர்கள் படகில்

ஏற முயன்றபோது கடல் கொந்தளிக்க ஆரம்பித்துவிட்டது. துடுப்பால் வலிக்கப்படும் படகுகள். கடலின் கீழ் பெரிய பாறாங்கற்கள். படகோட்டிகள் படகை எடுக்கப் பயந்தார்கள். இன்னும் கொஞ்ச நேரம், கொஞ்சநேரம் என்று தள்ளிப்போட்டுத் தள்ளிப்போட்டு, "இனி காலையில்தான்" என்றுவிட்டார்கள். அவளும் திருமலையின் சகாக்களுமாக கோட்டையின் மையப்பகுதியில் அமர்ந்து கொண் டனர். வீட்டுக்கு எடுத்துப்போக வைத்திருந்த மீன்களைப் படகோட்டி கள் எடுத்துவர, மூன்று கற்களைப் போட்டு அடுப்பு மூட்டி மீனை நெருப்பில் வாட்ட ஆரம்பித்தான் ஸ்டீவன். தங்கள் பங்கை எடுத்துக்கொண்டு படகோட்டிகள் போய்விட்டனர். அவர்களிட மிருந்து வாங்கி வைத்திருந்த ஒரு குப்பியைக் காட்டினான் லங்கேஷ். பனங்கள்ளுக் குப்பி. அண்ணாமலையும் அவனுமாக பைகளில் கிடந்த பிளாஸ்டிக் கிளாஸ்களில் ஊற்றினார்கள். கார்மேகம் சித்தப்பாவுக்கு உதவியாக இருந்து வினியோகம் செய்தான். ஒரு மசாலாவும் இல்லாமல் பதமாக வாட்டப்பட்ட மீன் வாயில் கரைந்தது. முதல்முதலாக ருசி பார்த்த பனங்கள் தலைக்குள் பல பாதைகளில் போய் பறக்க வைத்தது. மேலே வானம் நட்சத்திரங் களைக் கட்டிப்போட்ட கன்னங்கரேலென்ற மந்திரவாதியாய். லங்கேஷ் தன் மௌத் ஆர்கனை எடுத்தான். எஸ். டி. பர்மன், மன்னாடே, பங்கஜ் மல்லிக் ரசிகன் அவன்.

ஸுனு மேரே பந்தூரே ... ஏ ஸுனுமேரே மிதுவா ... ஆ
ஸுனு மேரே ஸாதி ... ரே

என்று எஸ். டி. பர்மனின் படகோட்டிகளின் பாடலை வாசிக்க ஆரம்பித்தான். நாட்டுப் பாடல். படகில் அமர்ந்து அசைவதுபோல் தோன்றியது. கார்மேகமும் ஸ்டீவனும் பீட்டில்ஸ் பாடல்களைச் சீட்டியடித்துப் பாட ஆரம்பித்தனர். கள்ளும், எஸ். டீ. பர்மனும், பீட்டில்ஸும் போதையை ஏற்றி மயக்கின. தரையில் மல்லாந்து படுத்து, அண்ணாமலைக்குப் பிடித்த, "சின்னச் சின்ன மூக்குத்தியாம் செவப்புக் கல்லு மூக்குத்தியாம் ..." என்று பாட ஆரம்பித்தாள். பிறகு, அவள் மேல் சாய்ந்து கொண்ட கார்மேகத்துக்காக ஒரு நீலாம்பரித் தாலாட்டு. கள் ஏறிய குரல் வழுக்கிக்கொண்டு போயிற்று. விடிய விடியப் பாட்டு, பேச்சு.

விடிகாலையில் கடல் அடங்கியது. படகோட்டிகள் வந்து கூப்பிட் டார்கள். அக்கரையில் திருமலை தவிப்புடன் நின்றிருந்தான். இரவெல் லாம் காத்திருந்த களைப்பு முகத்தில். உறக்கமில்லாத இரவு. கண்கள் சிவந்திருந்தன.

"திருமலை சார், உங்க வீட்டுக்காரி கொள்ளைக்காரங்க கோட்டையிலிருந்து வந்துட்டாங்க பத்திரமாக" என்றாள் லங்கேஷின் மனைவி.

கள், பாட்டு, மீன் பற்றிச் சொன்னதும், "என்ன அண்ணாமலை, அண்ணிக்குக் கள்ளு ஊத்திக் குடுத்தியா?" என்றான்.

"ஆமாண்ணா. இனிமே தெனமும் குடுங்க அவங்களுக்கு. அப்பத் தான் பாடவே குரல் வருது அவுங்களுக்கு" என்று சிரித்தான் அண்ணாமலை.

திருமலையும் சிரித்தான்.

அதற்குப் பின்பு இப்போது மீண்டும் மீனும், பனங்கள்ளும்.

"பழக்கம்தான்" என்றாள் செந்திரு.

சிலுசிலுவென்று காற்று வீசியது. கிளாஸ்களை நிரப்பினாள் ருக்மணிபாயி. மீனைக் கடித்துக்கொண்டு கள்ளை ஒரு வாய் விழுங்கியதும் தொண்டை கமறியது. பிறகு மெல்லமெல்லப் புகைப் படலம் போல் போதை மண்டையில் ஏறியது.

"ருக்மணிபாயி பாடினது பஹினிபாய் பாட்டுத்தானே?" என்றாள்.

"ஆமா. ருக்மணிபாயிதான் நாங்க போராட்டம் எல்லாம் நடத்தினா பாடறது. பஹினிபாய் பாட்டும் வரும். அதிகாரிகளை கிண்டல் பண்ணுற பாட்டும் வரும்."

பேசிக்கொண்டிருக்கும் போதே ருக்மணிபாயி வாய்விட்டு, உரத்த குரலில் பஹினிபாய் பாடலை மீண்டும் பாடினாள். பாடி முடித்ததும், "பாடறதும் ருக்மணிபாயிதான். எங்க சண்டையெல்லாம் தீத்து வைக்கிறதும் ருக்மணிபாயிதான்" என்றாள் மீனாபாயி.

"என்ன சண்டை?"

"ஒன்னுமில்ல" என்று விளக்க ஆரம்பித்தாள் ருக்மணிபாயி. "மீனாபாயியோட பேத்தியை அவ புருஷன் தள்ளி வச்சுட்டான். வயத்துல புள்ள நாலு மாசம். ஆம்பிளப் புள்ளையா பொறந்ததும் குழந்தை என்னுதுன்னான். நாலு பெரியவங்கள வெச்சுட்டு நல்லாக் கேட்டுட்டேன்."

"என்னன்னுட்டு?"

"இதபாரு, பாத்திரம் எங்களுது. பாலு எங்களுது. பிரை ஊத்த ஒரு சொட்டுத் தயிர் குடுத்தா, மொத்தத்தையும் ஆம்பிளைக்குத் தூக்கித் தந்திட முடியுமான்னுட்டுக் கேட்டேன்."

"என்னது? பிரை ஊத்த..." கிளாஸைக் கீழே வைத்துவிட்டுச் சிரிக்க ஆரம்பித்தாள் செந்திரு.

அவர்களும் சேர்ந்து சிரித்தனர்.

அதன் பிறகு தினைமாவு ரொட்டியும் துவையலும் சாப்பிட்ட போது வயிறும் மனமும் நிறைந்தது. கை கழுவ எழுந்தபோது தலை கூரை நுனியில் ணங்கென்று இடித்தது. அதே சமயம் வீணை ஒலி கேட்டது. தியானத்தின் ஏழாவது நிலையில் வீணை ஓசை கேட்குமாம். கள்ளுக்குக்கூட ஏழாவது நிலை உண்டா என்ன? மீண்டும் வீணை ஒலி.

"என்னது அது சவிதாபாயி?" என்றாள்.

"பீன்" என்றாள் சவிதாபாயி. அருவிக்கு அந்தப் பக்கம் ஓர் ஆசிரமம் இருக்கிறதாம். அங்கு ஓர் உஸ்தாத் இருக்கிறாராம். எல்லோரும் அவரை ஸூஃபி பாபா என்பார்களாம். ஷீர்டி சாயி பாபா மாதிரி இருப்பாராம். அவர் சில சமயம் இங்கு தொடர்ந்து இரண்டு மூன்று மாதங்கள் இருப்பாராம். அவர் வாசிக்கிறாராம். சில சமயம் இவர்கள்கூடப் போய்க் கேட்பதுண்டாம்.

கை கழுவிவிட்டு அவர்கள் படுத்தபோதும் வீணை ஒலி கேட்டபடி இருந்தது.

விடுதி அறை மேசை மேல் ஒட்டக மஞ்சள் நோட்டுப் புத்தகம் விரிந்து கிடந்தது. எழுதி முடித்த பக்கங்கள் மென்காற்றில் படபடத்த படி இருந்தன.

O O O

ராமனின் சகோதரி சாந்தி பல முறை கேட்டவண்ணம் இருந்தாள். "எப்படி இருப்பான் ராவணன்? வரைந்து காண்பியேன்." சீதையின் ஓவியத் திறமை எல்லோரும் அறிந்ததுதான். ஒரு நாள் அவள் வேண்டுகோளுக் கிணங்கி ஒரு காகிதத்தை எடுத்துத் தூரிகையால் வரையலுற்றாள். கால், கை, உடம்பு அத்தனையும் வரைந்தபின்பு முகம் வரையத் துவங்கும்போது ராமன் அந்தப்புரத்திற்கு வந்துவிட்டான். ஒரு நிமிடம் குழம்பிப் போய் பின்பு நீண்ட புடவைத் தலைப்பால் ஓவியத்தை மறைத்தாள். முகம் வரையப்படாத அந்த ஓவியம் புடவைத் தலைப்பினடியே. சீதை நகர முடியாமல் தவித்தாள். ராமன் சென்ற பிறகுதானே அதைக் கிழிக்க முடியும்? ராமனுக்கு உணவிட்டபடி சாந்திதான் ஓவி யத்தைப் பற்றிக் குறிப்பிட்டாள். "சிலருக்கு இங்கே ராவணன் நினைவுதான்" என்று தொடங்கி சொல்லிக் கொண்டேபோனாள்.

அதன் பிறகுதான் அந்த ரதப் பயணம்.

நண்பகல் நேரம். லவனும் குசனும் அவர்கள் பயிற்சிக்குப் பிறகு உணவு உட்கொள்ள வரும் நேரம் அது. எழுத்தாணியைக் கீழே வைத்தாள். லவனும் குசனும் விரைந்து வந்து இலையில் வைத்த உணவை உட்கொண்டனர். அவர்களைப் பார்த்தபடி இருந்தபோது, அவர்கள் இருவரும் பெண் குழந்தைகளாக இருந்திருந்தால் அவள் வாழ்க்கை எப்படி அமைந்திருக்கும் என்று கற்பனைசெய்தாள். அவர்களைக் கனிகளைக் கொய்து விளையாடவும், பூப்பறிக்கவும் விட்டிருப்பாளா? விட்டிருப்பாள் என்று தோன்றவில்லை. அவர் களையும் வீராங்கனைகளாகவே வளர்த்திருப்பாள். அவர்களை யாரும் கவர்ந்துசெல்ல முடியாது.

வாசலில் நிழல் தட்டியது. ராமன் நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்ததும் லவனும் குசனும் காட்டில் அவரைப் பார்த்த தாகவும், அவர் இவர்கள் யார் என்று கேட்டதாகவும் அதற்கு எங்கள் தாயின் பெயர் சீதை; தந்தையின் பெயர் தெரியாது என்று கூறியதா கவும் கூறினார்கள். தங்களைப் பின்தொடர்ந்து அவர் வந்திருக்கலாம் என்றார்கள். "நல்லது" என்றாள் சீதை. "உங்கள் தந்தையின் பெயர் ராமன். அவர் அயோத்தியின் அரசர். எதிரே நிற்பவர்தான் அவர்" என்றாள். ஒரு கணமும் தாமதிக்காமல் பாய்ந்து சென்றனர் இருவரும் தந்தையிடம். ராச்சியம் இருந்தது தந்தையிடம்தானே? பெண்மக்க ளாக இருந்திருந்தால் தாயையொட்டி நின்றிருப்பார்கள். தங்கள் தாயைக் காட்டில் விட்ட தந்தையைச் சந்தேகக் கண்களுடன் நோக்கியிருப்பார்கள்.

ராமன் இறைஞ்சத் தொடங்கினான். அவன் நிலைமையை சீதை உணரவில்லையா? அவளின்றி அவன் மகிழ்ச்சியுடன் வாழ்ந் தான் என்று அவள் நினைக்கிறாளா? அவன் பேசப்பேச அந்த பூமியே பிளந்துபோய் தன்னை உள்ளே இழுத்துக்கொள்ளக் கூடாதா என்ற ஓர் அதீத மன வேதனை ஏற்பட்டது. ராமனின் வேண்டு கோளை உறுதியுடன் மறுத்தாள். அவள் பயணம் வேறு திசையில் என்றாள். அதற்குப் பிறகு, பூமி பிளந்து தான் பூமியின் வெகு கீழே போய்விட்டதுபோல் ஓர் உணர்வு ஏற்பட்டது.

○ ○ ○

விடிகாலையில் கண் விழித்ததும் சவிதாபாயி எல்லோருக்கும் பாலும் சக்கரையுமில்லாத தேநீர் செய்து சுடச்சுடத் தந்தாள். மற்ற இருவரும் அவரவர் வீட்டுக்குப் போகக் கிளம்பினார்கள்.

இரவில் கேட்ட வீணை ஒலி இன்னும் மறக்கவில்லை. செந்திரு அருவியின் தெற்கே நடக்க ஆரம்பித்தாள். சற்றுத் தூரம் நடந்ததும் நாலைந்து சிறு குடில்கள் போன்ற வீடுகள் தெரிந்தன. பிரதான குடில்போல் தெரிந்த ஒன்றின் கதவு திறந்திருந்தது. மெல்ல உள்ளே நுழைந்தாள்.

ஒரு பக்கத்துச் சுவரின் ஒருபுறத்திலிருந்து இன்னொருபுறம் வரை வெள்ளை விரிப்புப் போட்ட கனமான மெத்தை மீது மூன்று ருத்ர வீணைகள் மூடப்படாமல் இருந்தன. அவற்றின் பக்கத்தில் அறுபது வயது மதிக்கத்தக்க ஒருவர் மடியில் ஒரு ருத்ர வீணையுடன் உட்கார்ந்திருந்தார். வெண்தாடி. இடையில் கட்டமிட்ட லுங்கி. மேலே குர்தா. பிருடையைத் திருகி, தந்திகளின் அருகே செவியைக் கொண்டு போய் சுருதியைச் சரிசெய்தபடி இருந்தார்.

இவள் நுழைந்ததும் அவளை அறிந்தவர் போல, "இங்கே வா பேட்டீ. இதைக் கேளு. சரியா இல்லையா என்று சொல்" என்றார் சுத்த ஹிந்தியில்.

வாழ்நாள் முழுவதும் வீணையின் சுருதியைச் சரிபார்ப்பதையே நிதமும் செய்தவள் போல் இவளும் அருகே சென்று ஒலியைக் கூர்ந்து கேட்டுவிட்டு, "சரியாக இருக்கிறது" என்றாள்.

அவர் எதிரே அமர்ந்து கொண்டாள்.

"எல்லாமே சுருதிதான், இல்லையா?" என்றார்.

"ஸுர் என்கிறோம். அஸுர் என்பது யார்? கோணல் பல்லும் கொம்பும், பத்துத் தலைகளும் இருப்பவர்களில்லை. ஸுர் என்ற ஒன்றை அறியாதவர்கள். அ-ஸுர். ஸுர் என்ற ஒன்று ஒலித்துக் கொண்டே இல்லாமலிருப்பதால்தான் வேகம், பலம், பாதை எதுவும் கட்டுக்குள் இல்லாமல் ஓடுபவர்கள். ஸுர் என்ற லகானில்லாதவர்கள்" என்றார்.

தலையை ஆட்டினாள்.

"சுருதி சேர வேண்டும். கூடி வர வேண்டும். நாம் அத்தனைபேரும் அ-ஸுர்தான். சுருதியைப் பிடிக்க ஓடுபவர்கள்."

"அவ்வளவு சிரமமா சுருதி கூடுவதில்?"

சிரித்தார்.

"அது பிடித்துப்போடும் விஷயம் இல்லையே? அலை அது. அதை அடக்கி அதன்மேல் படகோட்டும்போதே கவிழ்த்து விடும். பெரிய அலையாய் பிரமாண்டமாய் எழும்பும். நம் பக்கத்தில் வரும்போது நுரையாய்ப் போய்விடும். சேரும். குலையும். வரும். போகும். மூழ்கடிக்கும். தூக்கி எறியும்."

அவர் பேசியதும் வீசும் கடல்போல் ஒலித்தது.

"சங்கீதம் தெரியுமா?"

"ஏதோ கொஞ்சம். கர்னாடக சங்கீதம்."

"ம். கொஞ்சம் பாடு. உங்கள் சங்கராபரணம் பாடு" என்றார்.

சங்கராபரண வர்ணத்தின் பல்லவியைப் பாடினாள் மெல்ல. ஓங்கிக் குரலெழுப்பாமல்.

"ம்" என்றுவிட்டு வீணையை மடியில் வைத்துக் கொண்டு தைவதத்தை அழுத்தி நரம்பைச் சுண்டுவது போல் இழுத்தார். சில ஸ்வரக் கோர்வைகளை வாசித்துவிட்டு மீண்டும் அந்த நரம்பைச் சுண்டும் இழுப்பு. தநீ...

"இது எங்கள் த்ருபத் சங்கீதத்தில் பிலாவல் ராகம்" என்றார்.

அவர் காலருகே குனிந்து மெத்தையின் நுனியில் தலையைப் பதித்தாள். தநீ... தநீ... தநீ... என்று மின்சாரம் ஓடியது உடம்பில்.

"என்ன வேண்டும் பேட்டீ?" என்றார் தலையில் கை பதித்து.

"தெரியவில்லை" என்றாள் தலை நிமிராமல். "புரிந்தும் புரியாமலும் இருக்கிறது. புரிந்தவுடன் புரியாமல் போகிறது."

"அது அப்படித்தான்" என்றார் தலையில் தட்டித் தந்தபடி.

எழுந்து அமர்ந்துகொண்டாள்.

"நான் பம்பாயை விட்டு வந்துவிட்டேன்" என்றாள்.

"எல்லோருக்குமே இரண்டு தேர்வுதான். ஒன்று துறவு. இன்னொன்று துறவாமை. எது துறவு எது துறவாமை என்று புரிந்துவிட்டால் நான் ஏன் பீன் வாசிக்கிறேன், நீ ஏன் கேட்கிறாய்?" என்றார். சிரித்தார்.

"பம்பாயில் எனக்கு மூச்சு முட்டியது" என்றாள்.

"பம்பாய் உன்னுடன் இங்கே வரலாம். இந்தக் காடும் உன்னோடு பம்பாய் போகலாம்"என்றார்.

அவர் கண்களுள் பார்த்தாள்.

"அது அப்படித்தான்" என்றார். "பிலாவல் என் மாதாஜிக்குப் பிடித்த ராகம். பம்பாயில் முகமதுஅலி ரோட்டு நெருக்கடியில், அந்த சந்து வீட்டின் சன்னல் புறா க்கூம் க்கூம் என்றால் பிலாவலை 'ரியாஸ்' செய்கிறது என்பாள். எப்போதாவது பஸ் சத்தம், ரயில் சத்தத்தை மீறி ஒரு குயில் கூவுவது கேட்கும். "சரியான பிலாவல்" என்பாள். போன வருடம் இங்கே, இந்த இடத்தில்தான் காலமானாள். எண்பது வயது. வசந்தகாலம் அவள் சாகும்போது. இரவெல்லாம் தூக்கம் வராமல் கஷ்டப்படுவாள். விடிகாலை நான்கு மணிக்கு வெளியில் ஒரு நாற்காலி போட்டுக்கொண்டு உட்கார்ந்துவிடுவாள். எதிரே மாந்தோப்பு. ஒரு ஐந்துமணிவாக்கில் தினம்போல் குரல் கொடுப்பாள். "ஜலாலுத்தீன், ஏ ஜலாலுத்தீன்! இங்கே வா. குயில் பிலாவல் பாடுகிறது" என்பாள். குயில் பாடும் ஸ்வரத்தைச் சொல்லுவாள். "சுத்தமான பிலாவல்" என்று பூரித்துப் போவாள். அவளுடைய பிலாவல் அவளுக்கு எங்கு பார்த்தாலும் கேட்டது."

மீட்டுத் தந்திகளின்மேல் விரல்களை ஓட்டினார். ஒலி நீர்விழ்ச்சி.

எப்போதோ பள்ளியில் கற்றுக்கொண்ட பாடலின் வரிகள் மனத்தில் உயிர்த்தெழுந்தன. ஒலிரூபத்துடன். ஜாலம் செய்யும் சிந்து பைரவியில்.

கட்டற்ற காற்றினைப்போல் . . . கீழ் மட்ட ஸ்வரங்கள்.

உறுத்தாத சூரிய வெளிச்சம் வெளியே. உஸ்தாத்ஜி பிலாவலை ஆலாபனை செய்ய ஆரம்பித்தார்.

மதி கண்ட கடலினைப் போல்... கீழிருந்து மேலேறும் ஸ்வரங்கள்.

உஸ்தாத்ஜியின் மாணவர்கள் அறையில் மெல்லக் குழுமினார்கள். சுற்றிலும் அமர்ந்து கொண்டார்கள். மீண்டும்மீண்டும் ருத்ரவீணை யின் நரம்பைச் சுண்டும் இழுப்புகள்.

கொட்டும் அருவியைப் போல்... மேல் மட்டத்தை எட்டி வழியும் ஸ்வரங்கள்.

உஸ்தாத்ஜி வாசித்தபடி இருந்தார்.

ஜீவ குழலில் பாட்டிசைப்பாய்... அலைந்துவிட்டு வந்த பின்பு சீர்ப்பாதையில் ஸ்வரங்கள்.

பிலாவல் பாடும் குயில் மாந்தோப்பிலிருந்து கூவியது.

தநீ ... தநீ ... தநீ ...

எங்கும் பாடும் குயில். கேட்பவர் விரும்பும் ராகமாய் மாறும் குயில் பாட்டு.

எழுந்து, விடுதியை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

O O O

சீதையின் தீர்மானத்தை ஆசிரமத்தில் யாரும் ஏற்றுக்கொள்ள வில்லை. அயோத்தியின் அரசன் வந்து அழைக்கும் போது செல்ல மறுப்பது சரியில்லை என்றார்கள். அவள் இலக்குதான் என்ன? எதை நாடுகிறாள் அவள்? அனுமனின் தொடர்ந்த முறையீடுகள். மற்றவர்களின் கண்டனங்கள். பூமியின் அடியே, யாரும் எட்ட முடியாத வெகு ஆழத்தில் தான் சென்றுவிட்ட உணர்விலிருந்து அவளால் மீள முடியவில்லை.

எழுந்து நின்று குடிலைச் சுற்றி நோக்கினாள். இந்த முறை முற்றுந் துறவு. தனிப் பயணம். அறிந்தவர்கள். அன்புடன் பேசுபவர் கள், அறிவுரை கூறுபவர்கள் அனைவரையும் துறந்து. வெகு தூரம், வெகு ஆழம் நோக்கி ஒரு பயணம்.

அவள் நடக்க நடக்கக் காடு நீண்டுகொண்டே போயிற்று. ஆற்றைக் கடந்து, அருவியைத் தாண்டி, மான்கள் நீர் பருகும் ஓடையைப் பார்த்து, மானைத் தின்னும் புலியைக் கண்டு அதிர்ந்து, கூட்டமாய்ச் செல்லும் யானைகளிடையே ஓடும் குட்டி யானைகளை ரசித்து, ஆந்தையின் கண்கள் ஒளிரும் இரவுகளை எதிர்கொண்டு, சூரிய ஒளிபட்டு தகதகத்த பச்சை இலைகளைப் பார்த்தபடி, வயிற்றில் குட்டியுடன் கிளையிலிருந்து கிளைக்குத் தாவும் குரங்கு களைக் கண்டு வியந்தபடி நடந்தவண்ணம் இருந்தாள். நடை. உற்சாகம். தளர்ச்சி. ஓய்வு.

மீண்டும் நடை.

அதிகாலையில் அந்தச் சந்திப்பு நேர்ந்தது. பறவைகளின் சத்தம் எழாத வேளை. சூரியன் வானுக்குள் ரகசியமாய். வெகு தூரத்தே ஒரு குடில் தெரிந்தது. அதனுள்ளே விளக்கின் மென்ஒளி அலைந்தபடி. இருட்டைக் கிழித்தபடி வாத்தியம் ஒன்றின் ஓசை. நெருங்க, நெருங்க அது வீணை ஒலி என்று தெரிந்தது. எப்போதோ கேட்ட இசைபோல் தோன்றியது. அருகில் வந்ததும் இசை கட்டிப்போட்டது.,குடிலின் கதவு திறந்திருந்தது. உள்ளே எட்டிப் பார்த்தாள். தபஸ்விபோல் தோற்றமளித்த ஒருவன் வீணை வாசித்துக்கொண்டிருந்தான். இவள் நுழைந்ததும் வரவேற்றான். அவன் வாசிப்பில் குறுக்கிட்டுவிட்டாளா என்று வினவியபோது இல்லை என்று மறுத்தான். அவளுக்காகவே

காத்திருப்பதாகக் கூறினான். "என்னைத் தெரியவில்லையா? நான் தான் ராவணன்" என்றான்.

திடுக்கிட்டு ஓரடி பின்வாங்கினாள்.

"போரில் மடிந்து விட்டதாக...?"

"மாயாஜாலங்கள் நிறைந்த வாழ்க்கை இல்லையா இது? என் அரண்மனையில் இருந்த எல்லோரையும் ராமன் கொன்றபின் ஒரே ஒரு காவலாள் எஞ்சியிருந்தானாம். அவன் உயிர்ப் பிச்சை கேட்டானாம். தன் நண்பன் ஒருவனையும் உயிர்ப்பிக்கும்படி கேட்டானாம். ராமன் அவன் நண்பனை உயிர்ப்பித்துவிட்டு, இருவரும் லக்ஷ்மணன் வரும்முன் ஓடிவிடவேண்டும் என்றானாம். ஓடுவதற்குச் சக்தி இல்லை என்றதும் இருவருக்கும் சிறகுகளைத் தந்தானாம். அவர்கள் கருடனாகவும் கிளியாகவும் மாறிப் பறந்து போனார்களாம். சொல்கிறார்கள். அப்படி இந்த வனாந்திரங்களில் பறந்துகொண்டிருந்த ஒரு கிளியாக நான் இருந்திருக்க முடியாதா? சீதையைச் சந்திக்கும் தருணத்தை எதிர்நோக்கியிருக்கும் கிளி. கிழட்டுக் கிளி."

"இன்னுமா என் மேல் மோகம்? எத்தனையோ சோகங்களை அனுபவித்துவிட்டேன். பகடைக்காய் வாழ்க்கை வாழ்ந்துவிட்டேன். சோர்ந்துவிட்டேன். தளர்ந்துவிட்டேன். நாற்பது வயதைக் கடந்து விட்டேன்."

"இப்போதுதான் ஒரு பெண்ணுக்கு நண்பன் தேவை. உடல் மாற்றங்களால் அல்லலுறும் அவளைத் தாங்க. அவளுக்குச் சேவகம் செய்ய. உற்சாகமூட்ட. தூரத்தில் நின்று அவளை ஊக்கப்படுத்த."

சீதை கீழே அமர்ந்தாள்.

"எந்தத் தருணத்திலும் நான் நட்பை மறுத்ததில்லை. போருக்கு முன் பூசை செய்ய விரும்பினான் ராமன். இருவர்தான் பூசையை நடத்தித் தரமுடியும். ஒன்று வாலி. இன்னொன்று நான். வாலியைத் தன் கையாலேயே கொன்றாகி விட்டது. எஞ்சியது நான். எனக்கு அழைப்பு விடுத்தான். நான் சென்றேன். அவன் விருப்பப்படி பூசைசெய்தேன். வெற்றிபெற வாழ்த்தினேன்" என்றான்.

சீதை முதல் முறையாக அவனைப் பெயரிட்டு விளித்தாள்.

"ராவணா, சொற்கள் என்னைச் சோர வைக்கின்றன. மொழி என்னை முடக்கிப்போடுகிறது. உடலால் பிணைக்கப்பட்டு இருக்கிறேன்."

ராவணன் சிரித்தான்.

"உடல்தான் சிறை. உடல்தான் விடுதலை" என்றான்.

"பார்" என்று தன் ருத்ரவீணையைக் காட்டினான். "பார்வதி மல்லாந்து படுத்திருந்தபோது அவள் இரு கொங்கைகளைக் குடங்களாக்கி அவற்றின் முகடுகளைத் தந்திகளால் இணைத்தால் ஒரு

அபூர்வ வாத்தியம் அமையுமே என்று எழுந்த கற்பனையில் தோன்றிய இசைக்கருவி. இது தேவியின் உடம்பின் நீட்சி. சிவனின் வில்லையே ஒரு கையால் தூக்கியவள் நீ. இந்த வீணையை நீ எளிதாக ஆள முடியும். முயல்வாயா?"

"எனக்குக் கற்றுத்தர முடியுமா?"

"உனக்காகப் போர்செய்து தோற்றவன். இசையையா தர மறுப்பேன்? நிதமும் பயிற்சி தருகிறேன் உன் குருவாக இருந்து. இந்த வனமெங்கும் அந்த இசையின் ஒலி உடைப்பெடுத்துப் பாயட்டும். இதைச் சாதாரண வாத்தியமாக நினைத்து விடாதே. இதை உன் வாழ்க்கையாக எண்ணி இதை வாசி. இந்தா."

ருத்ரவீணையைத் தன் மடியிலிருந்து எடுத்து அவள் பக்கம் நீட்டினான்.

"அது கீழே தரையிலேயே இருக்கட்டும்" என்றாள் சீதை.

"ஏன்?"

"அது என் வாழ்க்கை இல்லையா? பல கைகள் பந்தாடிய வாழ்க்கை. அதை நானாகவே என் கையில் எடுத்துக்கொள்கிறேன்" என்றுவிட்டு ருத்ரவீணையைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டாள் சீதை.